Jan- Feb 2014



# அக்கினிக்குஞ்சு

உன் நம்பிக்கை வீண்போகாது. (நீதி 28:13)

# போதகரின் எண்ணங்களின் பதிவாய்...



**அன்பின் உறவுகளே!**

மலர்ந்திருக்கும் இனிய புத்தாண்டில் உங்களை நீங்கள் நிறைவோடு வாழ வேண்டும் என்று கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துகின்றேன். எல்லா வளங்களையும், நிறைவையும்,ஈவையும் அருளிச் செய்கின்ற தேவன் தாமே இந்த 2014ம் ஆண்டில் உங்களை எழுந்து பிரகாசிக்கப் பண்ணட்டும், உங்கள் துக்கத்திற்கு பதிலாக ஆனந்தத்தையும், கண்ணீருக்குப் பதிலாக களிப்பையும் தேவன் கட்டளையிடட்டும். உங்கள் நம்பிக்கை வீண்போகாது.

இம்மாதம் 13ம் தொடங்கி, 16ம் திகதி வரையில் கிளிநொச்சியில் நடைபெறவிருக்கும் போதகர்கள் "எழுந்து பிரகாசி" மாநாட்டிற்காக ஜெபியுங்கள். இந்தப் பெரிய ஊழியத்தை முன்னெடுத்துச் செல்லும் போதகர் சாரங்கபாணி ( மிஸ்பா நற்செய்தி சபை - கொழும்பு) அவர்களுக்காகவும், அவரோடு இணைந்து பணியாற்றும் யாழ்,மன்னார்,வவுனியா, கிளிநொச்சி,திருகோணமலை, முல்லைத்தீவு போதகர்களுக்காகவும் ஜெபியுங்கள். இந்த மாநாட்டில் செய்தியளிக்க வருகைதரும் சுவி, ஜிபிஎஸ். ரொபின்சன்( சென்னை), போதகர் சன்ரியாகோ (மலேசியா) ஆகியோருக்காவும், எனக்காகவும் ஜெபியுங்கள். தேவன் பிரயோஜனப்படுத்துகின்ற பாத்திரங்களாய் நாங்கள் இருக்கவும், தேவனால் தொடப்பட்ட நாவையுடையவர்களாய் பேசவும் எங்களுக்காக வேண்டிக் கொள்ளுங்கள்.

இந்தவருடத்தின் ஆகஸ்ட் மாதத்தில் சங்கீதங்கள் 150 அதிகாரங்களும் இசைவடிவமாக்கப்பட்டு முடிந்து விடும் என நம்புகின்றேன். இதற்காக பாரப்பட்டு உழைத்துக் கொண்டிருக்கின்றறோம். ஜனவரி மாதம் 21ம் திகதியில் இருந்து இசைப் பதிவுகள் ஆரம்பமாகும். இதற்காக தயவு செய்து உங்கள் ஜெபத்தில் எங்களைத் தாங்கிக் கொள்ளுங்கள். இந்த வருடமும் செய்யப்பட வேண்டிய வேலைகள் மிக அதிகமாய் இருக்கின்றன. உங்கள் ஜெபமே எங்களை நடத்தும்.

கர்த்தர் தாமே உங்களை ஆசீர்வதிப்பாராக!

## எழுந்து பிரகாசி - போதகர்கள் மாநாடு




**இடம்:**

**கிளிநொச்சி கூட்டுறவு நிலையம்-இலங்கை**

**செய்தியாளர்கள்:**

**சுவி.ஜி.பி.எஸ். ரொபின்சன்( சென்னை)**

**போதகர் சன்ரியாகோ (மலேசியா)**

**போதகர் மனோ தர்மலிங்கம் (கனடா)**

**ஒருங்கிணைப்பு, தலைமைத்துவம்:**

**போதகர் சாரங்கபாணி**

**மிஸ்பா ஜெப மிஷனரி ஊழியம்**

**கொழும்பு- இலங்கை**

**தொடர்புகளுக்கு: 011 94 776641907**

துதியின் கூடாரம்- Praise Tabernacle

5155,Specturm Way, Unit 7

Mississauga ,ON L4W 5A1☏ 416 554 8448

COME ! WORSHIP WITH US...

Service time: Every Sunday @ 9:30 AM Sunday school and Gateway English Service

10:30 AM & 6:00 PM Tamil / English. Further info:416 554 8448

# உன் நம்பிக்கை வீண்போகாது- நீதி 23:18

## போதகர் மனோ தர்மலிங்கம்- துதியின் கூடாரம்.

**அன்பும், கண்ணியமும் மிக்க உறவுகளே!**

மீட்பராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள். மலர்ந்திருக்கும் இந்தப் புத்தாண்டில் நிறைவான சந்தோசமும் சமாதானம், தேவ கிருபையும், சகல ஐஸ்வரியங்களும் உங்களை சூழ்ந்து கொள்ளுவதாக. பசுமையானதும், புதுமையானதுமான ஆண்டாக 2014ம் ஆண்டு உங்களுக்கு அமையட்டும். புதிய புதிய திட்டங்களும், புதிய புதிய செய்கை களும், முயற்சிகளும் உங்களிடமிருந்து வெளிப்பட்டு இழந்ததை மீட்கும் ஆண்டாக இந்த 2014 அமையட்டும் என்று என் தேவனும் நான் நம்பியிருக்கிற கன்மலையாகிய கர்த்தருமாகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் உங்களை நான் ஆசீர்வதிக்கின்றேன்.

ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு விடயத்தில் நம்பிக்கை வைக்கின்றான். சிலருக்கு மாமிசத்தில் நம்பிக்கை. சிலருக்கு பணத்தில் நம்பிக்கை. சிலருக்கு இறைவனில் நம்பிக்கை. சிலருக்கு மனிதனில் நம்பிக்கை. நம்பிக்கை என்பது நம்முடைய வாழ்வில் ஒரு முதுகெலும்பாய் இருக்கின்றது. எப்பொழுது அந்த நம்பிக்கையில் " அவ" என்னும் இரண் டெழுத்து சேருகின்றதோ அப்பொழுதே மனிதன் ஜடமாகி விடுகின்றான். மனிதனின் சரீரத்தில் எந்த இடத்தில் முறிவுண்டானாலும் அவனால் வாழ முடியும். ஆனால் முதுகெலும்பு முறியுமானால் அவனது வாழ்வின் மிகுதியான நாட்கள் எல்லாம் அவன் நடைப்பிணம் தான்.

அவ்வாறே நம்பிக்கையிழந்த மனிதன் நடைபிணமாய் போய்விடுகின்றான். என் மகன் நன்றாய் படித்து என்னைக் கடைசி காலத்தில் பார்த்துக் கொள்ளுவான் என்று நம்பி வாழும் பெற்றோர் அவர்களுடைய மகன் தடம் கெட்டு, தரம் கெட்டு படிப்பையும் விட்டு தெருவில் அலைவதைப் பார்க்கும் போது அவர்கள் அவன் மேல் வைத்த நம்பிக்கை அவ நம்பிக்கை யாகி விடுகின்றது. என் பேச்சை மீறமாட்டாள் என்று நம்பி வளர்த்த மகள் சொல்லாமல் கொள்ளாமல் ஒருவனோடு ஓடி விடும்போது அவர்கள் நம்பிக்கை அவநம் பிக்கையாகி விடுகின்றது. வீடுவருவான் என்று எதிர்பார்த்திருந்த மனைவிக்கு உன் கணவன் வேலையிடத்தில் நடந்த விபத்தில் உயிரிழந்தான் என்ற கேட்ட அக்கணத்திலே வாழ்வைக் குறித்த அவநம்பிக்கை வந்து விடுகின்றது. அவ்வாறே நம்பிக்கையிழந்த மனிதன் நடைபிணமாய் போய்விடுகின்றான். என் மகன் நன்றாய் படித்து என்னைக் கடைசி காலத்தில் பார்த்துக் கொள்ளுவான் என்று நம்பி வாழும் பெற்றோர் அவர்களுடைய மகன் தடம் கெட்டு, தரம் கெட்டு படிப்பையும் விட்டு தெருவில் அலைவதைப் பார்க்கும் போது அவர்கள் அவன் மேல் வைத்த நம்பிக்கை அவ நம்பிக்கை யாகி விடுகின்றது. என் பேச்சை மீறமாட்டாள் என்று நம்பி வளர்த்த மகள் சொல்லாமல் கொள்ளாமல் ஒருவனோடு ஓடி விடும்போது அவர்கள் நம்பிக்கை அவநம்பிக்கையாகி விடுகின்றது. வீடுவருவான் என்று எதிர்பார்த்திருந்த மனைவிக்கு உன் கணவன் வேலையிடத்தில் நடந்த விபத்தில் உயிரிழந்தான் என்ற கேட்ட அக்கணத்திலே வாழ்வைக்

குறித்த அவநம்பிக்கை வந்து விடுகின்றது.

ஆக மனிதர்கள் மேல் வைக்கும் நம்பிக்கை ஒருநாள் முடிவுக்கு வந்து விடுகின்றது. அதனையே பரிசுத்த வேதாகமத்தில் ஏசாயாய என்னும் தீர்க்கதரிசியின் மூலம் தேவன் இவ்வாறு கூறுகின்றார் " நாசியில் சுவாசமுள்ள மனிதனை நம்புவதை விட்டுவிடுங்கள், அவன் எண்ணப்படுவதற்கு எம்மாத்திரம் (ஏசாயா 2:22). இந்த உலகத்தில் உள்ள உறவுகள் எல்லாம் தற்காலிகமானவைகளே. அவைகள் யாவும் கானல் நீரே. ஆனால் நம்மை தமது சாயலாயும், ரூபத்தின்படியேயும் உருவாக்கிய உன்னத ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் மேல் வைக்கும் நம்பிக்கையானது நம்மை எந்த வேளையும் உந்திச் தள்ளும் சக்தி மாத்திரமன்றி, அசைக்க முடியாது, முறிக்க முடியாத முதுகெலும்புக்குச் சமானம்.

இந்த 2014ம் ஆண்டில் உங்கள் நம்பிக்கையைப் பெலப்படுத்துவார். நீங்கள் வாழவேண்டும் என்றால் தேவனை நம்பியே ஆக வேண்டும். நிச்சயம் முடிவு உண்டு, உன் நம்பிக்கை வீண்போகாது - நீதி 23:18 என்பதே இந்த வருடத்தில் தேவன் உங்களுக்கு அருளும் வாக்காகும். உன் நம்பிக்கை வீண்போகாது. முடிந்து விட்டது என்று எதனை நினைத்தீர்களோ அது புதிய ஆரம்பமாய் திரும்பும், தொலைந்து விட்டது என்று எதனை நினைத்தீர்களோ அது உங்கள் கரங்களுக்கு கிடைக்கும், இறந்ததும், உலர்ந்ததும் உயிரோடு உங்களிடமாய் வரும்.

**தொலைந்து போன கோடரியை நீரின் மேல் மிதக்கப்பண்ணின தேவன்**

ஒருவன் கோடாரி ஒன்றை இரவல் வாங்கி தங்கள் தேவைக்காக மரம் வெட்டிக் கொண்டிருந்தான். அப்பொழுது அந்தக் கோடாரி கழன்று மரம் வளாந்திருந்த ஆற்றுக்குள் விழுந்து விட்டது. அப்பொழுது அந்த மனிதன் அவனோடு நின்ற தேவனுடைய ஊழியனை நோக்கி ஐயோ ஆண்டவனே இந்தக் கோடாரி இரவலாக வாங்கப்பட்டதே என்றான் (2 இராஜாக்கள் 6:5). ஒருதேவைக்காக இரவலாக வாங்கப்பட்டது ஆற்றுக்குள் விழுந்ததைக் கண்ட போது அந்த மனிதனின் இருதயம் அலறியது. ஒவ்வொரு மனிதனுக்கும் இது உதாரணமானது. தேவையை சந்திக்க சிலசமயங்களில் கடனும், இரவலும் வாங்க வேண்டியிருக்கின்றது. அப்பொழுது நம்முடைய உள்ளத்தில் எப்படியாகிலும் இதனைக் கட்டிவிடலாம் என்றோ அல்லது, திருப்பிக் கொடுக்கலாம் என்றோ தான் வாங்குகின்றோம். ஆனால் எதிர்பாராமல் கொடுக்க முடியாமல் கட்ட முடியாமல் திகைத்து நிற்கின்றோம். ஒருவேளை இந்தப் பகுதியை நீங்கள் வாசிக்கும் போது இப்படிப்பட்ட சூழ்நிலைமையில் இருக்கக் கூடும். என்ன செய்வேன் என்று ஏங்க கூடும். ஆனால் உங்களை நீங்கள் நம்பும் தேவன் ஒருபோதும் கைவிடவே மாட்டார். ஐயோ என்று அழுதவனுக்கு ஆண்டவர் அற்புதம் செய்தார். எப்படி என்று கேட்கின்றீர்களா. அருகில் நின்ற தேவனுடைய மனிதன் ஒரு மரக்கிளையை வெட்டி ஆற்றில் எறிந்தான். அந்த மரக்கிளை ஆற்றில் மூழ்கிய கோடாலியை தண்ணீரின் மேல் மிதக்கச் செய்தது. அவன் கையை நீட்டி எடுத்துக் கொண்டான் ( 2 இராஜா 6:7). மரக்கிளை மிதக்கச் செய்ததைப் போலவே கிறிஸ்துவின் சிலுவை என்ற மரம் உங்களுக்காக அற்புதம் செய்யும். நீங்கள் உங்கள் கைகளை நீட்டி எடுத்துக் கொள்ளுவீர்கள் . சிலுவையினால் உங்களை மீட்டுக் கொண்ட கர்த்தர் சிலுவை யில் அவர் சிந்திய இரத்தத்தின் மூலமாய் உங்களுக்கு அற்புதம் செய்வார். உங்கள் நம்பிக்கை வீண்போகாது.

**மாறா என்னும் கசப்பை மதுரமாய் மாற்றிய தேவன்**

இஸ்ரவேலர்கள் என்னும் மக்கள் எகிப்தின் அடிமைத்தளையில் இருந்து விடுவிக்கப்பட்டு வாக்குத்தத்தம் செய்யப்பட்ட கானானை நோக்கி நடந்து வந்தார்கள். வனாந்திரத்தின் கொடிய வெப்பத்தினால் நாவு வறண்டு போய் விட்டது. தண்ணீர் தண்ணீா என்று அலைந்தவர்களின் கண்ணெதிரே ஒரு சிறிய ஊற்று. ஆசை தீர அள்ளிப்பருகலாம் என்று வந்தவர்களுக்கு ஏமாற்றம் தான். காரணம் அந்த நீர் குடிக்க முடியாத உப்பு நீர் (யாத் 15:23). தண்ணீர் எவ்வளவு இருந்து தான் என்ன புண்ணியம்?. ஒன்றுக்கும் உதவாத நீரால் என்ன நன்மை.

கண்ணியம் மிக்கவர்களே, ஒருவேளை நீங்களும் மாராவின் அருகில் நின்று கொண்டிருக்கின்றீர்களா?. இருந்து அனுபவிக்கமுடியாமல் இருக்கின்றீர்களா?. என்னை ஆதரிப்பான் என்று நினைத்து வளர்த்த பிள்ளை உங்களை மறந்து போய்விட்டானா?. ஆசையாய் தூக்கி வளர்த்த மகள் உங்களை துாக்கி ஏறிந்து விட்டுப் போய்விட்டாளா?. வாழ்வேன் என்று வாக்களித்த மனைவி பிரிந்து விட்டாளா?. நம்பியிருந்த கணவன் உதறிவிட்டுப் போய்விட்டானா?. இவைகள் எல்லாமே நமக்கு மாராக்கள் தான். ஆபத்துக்கும், அவசரத்துக்கும் உதவாதவைகள் தான். ஆனால் இவ்வாறு தாகத்தோடு வந்த மக்கள் அலறியபோது அவர்கள் நம்பியிருந்த தேவன் அவர்களை மறந்துவிட்டாரா?. இல்லவே யில்லை. அப்பொழுது அவர் ஒரு மரத்தைச் சுட்டிக் காண்பித்து, அந்த மரத்தை எடுத்து அந்த நீரில் போடும்படி கட்டளையிட்டார் (யாத்தி 15:25). தேவனுடைய மனிசனாகிய மோசே கர்த்தர் கட்டளையிட்ட பிரகாரம் அவ்வாறே செய்த போது அந்த உப்பு தண்ணீர் நல்ல தண்ணிராய் மாறியது.

கண்ணியம் மிக்கவர்களே, உங்கள் நம்பிக்கை வீண்போகாது. உங்கள் வாழ்வில் உள்ள கசப்புக்களை நீக்கி, இனிப்பாய் மாற்ற வல்ல தேவனை நீங்கள் நம்பிச் சார்வதால் உங்கள் நம்பிக்கை ஒருக்காலும் வீணாகாது. சிலுவையில் உங்களுக்காக மரித்த உயிர்த்தெழுந்த ஆண்டவர் உங்களோடிருக்கின்றார். சிலுவை முன்னிறுத்தி உங்கள் வாழ்வை ஆதாரப்படுத்துங்கள். உங்கள் நம்பிக்கை வீண்போகவே போகாது. இந்த 2014ம் ஆண்டு உங்கள வெற்றியின் ஆண்டு. இயேசுவின் மேல் நீங்கள் கொண்டுள்ள நம்பிக்கையே உங்களை உயர்த்தும்.

**ஆமென்**

**Don't forget.... Every Sunday you have a vibrant church is waiting for you to come and worship the king of King and the Lord of all. Our services are begins at sharp time. We want to serve you with Christ's love and compassion. Please come and grow in the grace of God. Call us for your transport @ ☏416 554 8448**



# ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த்
## (1859 - 1947)

(ஆதி அப்போஸ்தலருடைய காலத்திற்குப் பின்னர் 1859 முதல் 1947 ஆம் ஆண்டு வரை வாழ்ந்த இங்கிலாந்து தேசத்தின் படிப்பறிவு இல்லாத ஒரு எளிய கொத்தனாரை (Mason) தேவன் தமது பரிசுத்த நாமத்திற்கு மகிமையாக, மனுப்புத்திக்கு எட்டாதவிதத்தில் வெகு வல்லமையாக எடுத்து பயன்படுத்தியிருக்கின்றார். அந்த தேவ மனிதர் தனது ஆண்டவரைப் போல மரித்தோரை உயிரோடு எழுப்பியிருக்கின்றார். குருடருக்கு பார்வையைக் கொடுத்திருக்கின்றார். முடவர்களை எழுந்து நடக்கச் செய்திருக்கின்றார். அவரால் சரீர சுகம் பெற்றோர் ஏராளம், ஏராளம். மனுஷர்களுடைய பாவங்களையும் அவர்களுடைய நெஞ்சின் நினைவுகளையும் அவர்களுக்கு உணர்த்திக் கூறியிருக்கின்றார். அவருடைய காலத்தில் ஒரு பெரிய எழுப்புதல் அவருடைய சொந்த தேசமான இங்கிலாந்தில் மாத்திரமல்ல முழு ஐரோப்பா, அமெரிக்கா, ஆப்பிரிக்கா போன்ற பற்பல வெளிநாடுகளிலும் பரவியிருக்கின்றது. அவருடைய தேவச் செய்திகளைக் கேட்டு மனந்திரும்பினோர் அநேகர். அவருடைய தேவ ஊழியம் எத்தனை வல்லமையாக சிறப்பிற்று விளங்கினதோ அதே வண்ணமாக அவரது தனிப்பட்ட கிறிஸ்தவ வாழ்க்கையும் தேவன் விரும்பும் நற்கந்த வாழ்க்கையாக பிரகாசித்து பரிமளித்திருக்கின்றது. யார் அந்த தேவ மனிதர்? ஆம், அவர்தான் ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த்.

அவரது வாழ்க்கை வரலாறு குறித்து தெளிவான விவரணங்களை நாம் அறியக்கூடாதவர்களாயினும் அவரோடு வெகு நெருக்கமாக பழகிய அவரது பரிசுத்த சிநேகிதர் ஒருவர் நமது உள்ளம் களிகூரத்தக்கதான விதத்தில் அவரது பரிசுத்த வாழ்க்கைச் சாயலையும், அவரது பரிசுத்த பண்புகளையும், அவரை ஆண்டவர் பயன்படுத்திய விதத்தையும், அதின் இரகசியத்தையும் நமக்குத் தருகின்றார். தேவன்தாமே அந்த அற்புதமான வாழ்க்கைச் சரித்திரத்தை உங்களுக்கும் எனக்கும் ஆசீர்வதித்துத் தருவாராக)

மாபெரும் தேவ மனிதர் ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த்தை நான் (ராபர்ட் கிப்பர்ட்) நேரில் சந்திக்க எனக்கு சந்தர்ப்பம் கிடைத்ததுடன் அவருடைய தனிப்பட்ட வாழ்விலும் நான் கலந்து அவருடைய பரிசுத்த வாழ்வின் காரியங்களை நேரிடையாக காணும் பாக்கிய சிலாக்கியமும் எனக்குக் கிடைத்தது. பிரசங்க பீடத்தில் நாம் காண்கின்ற அநேக தேவ ஊழியர்களை அவர்களது இல்லங்களில் அதே பரிசுத்தமாக நாம் காண்பது என்பது முற்றும் அரிதான காரியமாகும். ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த்தை பிரசங்க பீடத்தில் பார்ப்போர் அவரது கிறிஸ்துவின் மென்மையான சாயலை உடனே கண்டு கொள்ளுவது சற்று கடினமாகும். அழியும் ஆத்துமாக்களுக்காகவும், ஏழை எளியோருக் காகவும் மனதுருகி சிந்தும் அவரது கண்ணீரை நாம் காண வேண்டுமாயனால் அவரோடு நாம் நெருங்கிப் பழகியிருக்க வேண்டும்.

விக்கிள்ஸ்வொர்த் விசுவாசத்தின் மாபெரும் வீரன். அவரது விசுவாசமும், வல்லமையும் நிறைந்த தேவ ஊழியத்தின் காரணமாக மேற்கிலிருந்து கிழக்கிற்கும், வடக்கிலிருந்து தெற்கிற்கும் இங்கிலாந்து தேசத்தில் எழுப்புதல் காட்டுத் தீ போல பரவியது. அந்த எழுப்புதல் அக்கினியை இன்று வரை நம்மால் நன்கு உணர முடிகின்றது. விக்கிள்ஸ்வொர்த்துடன் ஐக்கியம் கொள்ளும் எவரும் தங்களில் ஒரு நிச்சயமான பரிசுத்த மாற்றம் பெறாமல் பழைய நிலையில் இருப்பது என்பது முற்றும் கூடாத காரியமாகும். அவர் 1947 ஆம் ஆண்டு மார்ச் மாதம் இறந்தார். ஆனால், அவர் விட்டுச் சென்ற அவரது வல்லமையான தேவ ஊழியம் இன்றும் ஆச்சரியத்தோடு தேவ மக்களால் நினைவுகூரப் படுகின்றது. உண்மையில் அது என்றும் அவர்களால் நினைவுகூரப்பட்டுக் கொண்டேயிருக்கும்.

எனக்கு வந்த மரணத்துக்கேதுவான நோயின் பிடியிலிருந்து நான் தேவனால் அற்புதமாக சுகம்பெற்ற ஒரு ஆச்சரிய நிகழ்ச்சியின் மூலமாக தேவ மனிதர் ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த் அவர்களுடன் எனக்கு நெருக்கமான பரிசுத்த சகவாசம் கிடைத்தது. அந்த அற்புத சுகத்தை ஆண்டவர் எனக்கு விக்கிள்ஸ்வொர்த்தின் மிக நெருங்கிய தேவ ஊழிய நண்பர் பாஸ்டர் ரிச்சர்ட்சன் என்பவர் மூலமாக எனக்குக் கொடுத்தார். அது ஒரு ஈஸ்டர் காலமாகும். திடீரென நான் சுகயீனம் அடைந்தேன். ஆரம்பத்தில் அந்த எனது வியாதி அத்தனை பெரியதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால், பின்னர் அது இரட்டை நிம்மோனியாவாக விரிவடைந்து இறுதியில் நான் சுயநினைவிழந்து கோமா நிலைக்குள்ளானேன். என்னைப் பரிசோதித்த மூளை மருத்துவ டாக்டர் நான் திரும்ப சுயநினைவு அடைவது என்பது முற்றும் இயலாத காரியம் என்று கூறிவிட்டார். எனது மூளையானது வெகுவாக பாதிப்புக்குள்ளாகியிருப்பதால் ஒருக்கால் நான் திரும்ப சுயநினைவு பெறுவதானாலும் நான் மனநிலை பாதிப்பு அல்லது உடல் ஊனமுற்றவனாகத்தான் வாழ முடியும் என்று சொன்னார்.

ஈஸ்டர் தினத்தின் மாலை நேரம் எனது கோமா நிலை அதிகரித்துவிட்டது. என்னை பரிசோதித்த மருத்துவர் அந்த நாளிலேயே நான் மரணமடையக்கூடும் என்று திட்டமாகச் சொல்லிவிட்டார். நானும், என் தாயாரும் போய் வந்த தேவாலயத்தின் பரிசுத்த குருவானவர் ரிச்சர்ட்சன் என்பவரை எனக்காக ஜெபிக்கும்படியாக அழைத்து வந்தார்கள். அந்தச் சமயம் அந்த தேவாலயத்தில் ஒரு கன்வென்ஷன் நடந்து கொண்டிருந்தது. அதில் தேவச் செய்தி கொடுக்கும்படியாக அழைக்கப்பட்டிருந்த சார்லஸ் பெக்கரி என்பவரும் எங்கள் குருவானவருடன் எங்கள் வீட்டிற்கு வந்தார். அவர்கள் இருவரும் எங்கள் வீட்டிற்கு வரவும் எனக்கு மருத்துவம் பார்த்த டாக்டர் தனது வீட்டிற்குப் புறப்பட ஆயத்தமாக இருந்தார். சபையின் குருவானவர் ரிச்சர்ட்சன் அந்த டாக்டரிடம் எனது நிலையைக் கேட்டபொழுது "இன்னும் ஒன்று அல்லது இரண்டு மணி நேரத்திற்குள்ளாக நான் மரித்துவிடுவேன்" என்று கூறினார். எனது

நிலையை அறிந்த எனது குடும்பத்தினர் அனைவரும் எனது அறையில் ஒன்று கூடிவிட்டனர். நான் எனது பெற்றோருக்குக் கடைசி புதல்வன் மாத்திரமல்ல, நான் எனது குடும்பத்தினர் யாவருக்கும் செல்லப் பிள்ளையானதால் எனது உடன் பிறந்தவர்களுக்கும், பெற்றோருக்கும், எனது இனஜனத்தினருக்கும் டாக்டர் சொன்ன வார்த்தைகள் ஆறாத துயரமாக இருந்தது.

குருவானவர் ரிச்சர்ட்சனும், சார்லஸ் பெக்கரியும் நான் படுத்திருந்த அறைக்கு வந்தனர். அவர்களில் பெக்கரி என்ற தேவ மனிதர் அந்த அறையில் கூடியிருந்த எங்கள் குடும்பத்தின் மக்களைப் பார்த்து "இன்று ஒரு அற்புதம் நடைபெறப் போகின்றது என்பதை தேவன் எனக்குக் காண்பித்திருக்கின்றார். அப்படி ஒரு அற்புதம் நடைபெற்று இந்தச் சிறுவன் சுகம்பெறும் பட்சத்தில் ஆண்டவர் இயேசுவுக்கு உங்கள் நன்றி காணிக்கை என்ன?" என்று அவர் கேட்டார். கட்டுமஸ்தான அழகான வாலிபனான எனது உடன் பிறந்த அண்ணன் உடனே எழுந்து நின்று அவருக்குப் பிரதியுத்தரமாக "தேவன் எனது தம்பியை சுகமாக்கும் பட்சத்தில் நாங்கள் எல்லாரும் அவருக்கு தேவ ஊழியம் செய்வோம்" என்று சொன்னான். "நீங்கள் யாரிடம் பொருத்தனை செய்திருக்கின்றீர்கள்? என்பதை அறிந்திருக்கின்றீர்கள். என்னிடம் மட்டுமல்ல, தேவனிடம் வாக்கு கொடுத்திருக்கின்றீர்கள்" என்றார் பெக்கரி.

"யாரிடம் வாக்குக் கொடுத்திருக்கின்றோம் என்பதைக் குறித்து நாங்கள் நன்கு அறிந்திருக்கின்றோம்" என்று எனது அண்ணன் பதில் கொடுத்தான்.

அதின்பின்னர் பெக்கரி எனது சுகத்துக்காக உள்ளம் உருகி ஜெபித்துவிட்டு "உடனடியாக சிறுவனுக்கு சுகம் கிடைக்காதபோதினும் அதைக் குறித்து ஏமாற்றமடைந்து சோர்ந்து போகாமல் இருக்கும்படியாகக் கூறிவிட்டு" போய்விட்டார். அவர் சொன்னது போலவே அவர் ஜெபித்த உடன் ஒன்றும் நடைபெறவில்லை. எங்கள் தேவாலயத்தின் குருவானவர் ரிச்சர்ட்சன்னும், அவர் தம்முடன் அழைத்து வந்திருந்த சார்லஸ் பெக்கரியும் எனது சகோதரி எங்கள் வீட்டில் ஆயத்தம் செய்து வைத்திருந்த சிற்றுண்டியை அருந்திவிட்டு நேரடியாக கன்வென்ஷன் கூட்டத்தில் கலந்துகொள்ள தேவாலயத்திற்குச் சென்றுவிட்டனர்.

இதற்கிடையில் எனது அண்ணன்மார்கள் எனக்கு வாங்கி வந்த சாக்லெட் மேஜையின் மேல் இருந்தது. திடீரென, நான் எனது மரணத்துக்கு ஏதுவான கோமாவிலிருந்து தெளிவு பெற்று பூரண சுய நினைவுடன் என்னை அறியாமலே "அம்மா, எனது சாக்லெட் எங்கே?" என்று சத்தமிட்டுக் கேட்டேன். அப்பொழுதே நான் பூரண சுகம்பெற்றேன். அதைத் தொடர்ந்து எங்கள் குடும்பம் முழுமையாக ஆண்டவரைத் தங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டது. எனது அற்புதமான சுகத்தை தாங்களாகவே தங்களது கண்களினால் பார்த்த எனது குடும்பத்தைச் சேர்ந்த 57 பேர்கள் இரட்சிக்கப்பட்டனர். எனது தகப்பனார்தான் அதில் முதலாவது ஆண்டவரை தனது சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார்.

தேவ பக்தன் ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த் எங்கள் வீட்டிலிருந்து 20 மைல்கள் தொலைவில்தான் இருந்தபோதினும் நாங்கள் அவரை அதுவரை சந்திக்கவே இல்லை. எனக்கு கிடைத்த அற்புத சுகத்தை தனது நண்பர் ரிச்சர்ட்சன் குருவானவர் மூலமாக அறிந்த அவர் எங்களை வந்து சந்தித்து அது குறித்து விபரமாகக் கேட்டறிந்தார். எனக்குக் கிடைத்த அற்புத சுகத்தை அறிந்து கர்த்தருக்குள் அவர் களிகூர்ந்தார். அதிலிருந்து எங்கள் தேவ ஐக்கியமும், நட்பும் வளர ஆரம்பித்தது.

இரக்கமும், மனதுருக்கமும் நிறைந்த தேவ பக்தன்

ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த் தனது ஆண்டவரைப் போல மக்களை அதிகமாக நேசித்து, கஷ்டம், கண்ணீரில் இருக்கிற மக்கள்மேல் மனதுருகி அவர்களுக்குத் தன்னாலியன்ற அனைத்து உதவிகளையும் செய்தார். நான் ஒரு தடவை அவருடைய வீட்டிற்குச் சென்றிருந்தபோது அவருடைய மகள் அலீஸ் தனது தகப்பானாருடைய ஆச்சரியமான அனுபவத்தை இவ்விதமாக என்னிடம் பகிர்ந்து கொண்டார்கள்.

(ஒரு குறிப்பிட்ட நாளில் அன்றைய தினம் ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த்துக்கு வந்த கடிதங்களில் ஒரு கடிதத்தில் "தயவுசெய்து நீங்கள் வந்து எங்களுக்கு உதவி செய்யுங்கள். நாங்கள் மிகுந்த வியாகுல மனக்கிலேசத்தில் இருக்கின்றோம்" என்று எழுதப்பட்டிருந்தது. அதைப்படித்த எனது தகப்பனாருடைய கண்களிலிருந்து கண்ணீர் வடிந்தது. கண்ணீர் வடிந்தவாறே அந்தக் கடிதத்தை நான் வாசிக்கும்படியாக எனக்குக் கொடுத்தார்கள். எனது உள்ளத்தில் அந்தக் கடிதம் எந்த ஒரு சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. "என்ன காரியம் அப்பா?" என்று நான் அவர்களிடம் கேட் டேன். "நமக்கு தினமும் நூற்றுக்கணக்கான கடிதங்கள் உதவி கேட்டு வருகின்றன. ஆனால், அந்த எல்லாக் கடிதங்களைக் காட்டிலும் இது முற்றிலும் வித்தியாசமான ஒன்றாக உனக்குத் தெரியவில்லையா?" என்று என்னிடம் கேட்டார்கள்.

உடன்தானே தனது மேல் சட்டையை (கோட்டை) எடுத்துப் போட்டுக்கொண்டு கடிதத்தில் கண்ட முகவரியைத் தேடிக் கொண்டு அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். இறுதியாக அவர்கள் தேடிச் சென்ற வீடு கண்டு பிடிக்கப்பட்டது. இங்கிலாந்து தேச புரதான கால அந்தக் கிராமப்புற வீடு ஒரு பெரிய அரண்மனையைப் போல காட்சியளித்தது. வீட்டிற்குச் சென்ற எனது தந்தை கதவின் மணியை அடிக்கவே மிகுந்த துக்கம் நிறைந்த முகத்தோடு ஒரு வாட்ட சாட்டமான மனிதர் அந்த வீட்டின் கதவைத் திறந்தார். அவரிடம் தனது வழக்கமான பாணியில் "நான்தான் ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த். உங்கள் கடிதம் கிடைக்கப்பெற்றேன்" என்று கூறினார்கள். அந்த மனிதர் எனது தந்தையின் கரத்தை அன்பொழுகப் பற்றிப் பிடித்து வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். பின்னர், எனது தந்தையின் தோள் மேல் தனது கையைப் போட்ட வண்ணமாக ஒரு வார்த்தை கூட பேசாமல் தரையில் அழகான கம்பளம் விரிக்கப்பட்ட ஒரு பெரிய விசாலமான அறைக்கு அப்பாவை அழைத்துச் சென்று அந்த அறையின் கதவைத் திறந்து அவர்களை உள்ளேவிட்டுவிட்டு அறையின் கதவை மூடிவிட்டு அந்த தனவான் போய்விட்டார்.

அறையின் உள்ளே சென்ற எனது அப்பா கண்ட காட்சியை அவர்கள் என்றுமே மறக்க இயலாது. 17 வயதான ஒரு அழகான வாலிபப் பெண்ணை 3 திடகாத்திர வாலிபர்கள் தரையோடு தரையாக வைத்து அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தனர். அவள் முழுமையாக பிறந்த மேனியில்தான் இருந்தாள். அந்த வாலிபர்கள் அந்தப் பெண்ணைப் பிடித்து அடக்குவது மிகவும் கடினமாக இருந்தது. அவள் மிகுந்த வீராவேசத்தின் கோபத்தோடு சாத்தானுடைய முழுக்கட்டுப்பாட்டிற்குள் இருந்தாள். பிள்ளையின் தகப்பன் மிகுந்த செல்வச் சீமானாக இருந்தபடியால் தனது அன்பு மகளை ஒரு சிறிய அறையில் பூட்டி வைத்து அவளை வேதனைப்படுத்தாமல் இவ்விதமாக தனது வீட்டிலேயே ஆட்களை வேலைக்கு வைத்து அவளை அடக்கி வைத்திருந்ததுடன் அவள்

தன்னையே லேகியோனைப் போல காயப்படுத்தி, கோரப்படுத்தி அழித்துக் கொள்ளுவதிலிருந்து பாதுகாத்து வந்தார்.

எனது தகப்பனார் அந்த அறைக்குள் வந்ததைக் கண்டதும் அந்தப் பெண் தனது கொந்தளிப்பின் குமுறலையும், போராட்டத்தையும் கைவிட்டு தனது முகத்தை எனது தந்தைக்கு நேராகத் திருப்பி "நீங்கள் யார் என்பது எனக்குத் தெரியும். நீங்கள் உன்னத தேவனுடைய ஊழியக்காரரான ஸ்மித் விக்கிள்ஸ்வொர்த்" என்று சொன்னாள். அதைக் கேட்ட எனது தந்தை "இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் நீ உனது வாயை மூடு" என்று கட்டளையிடவும் அவள் அந்த அறையின் ஒரு மூலைக்கு பின் நோக்கி நகர்ந்து சென்றாள். எனது தந்தையும் அவளைத் தொடரவே அந்தப் பெண் பயத்தில் நடுநடுங்கி "அவள் எங்களுடையவள்" என்று கூறினாள். "அசுத்தமான பிசாசுகளே, நான் உங்களிடம் வாக்குவாதம் செய்ய வரவில்லை. அவளை விட்டு வெளியே ஓடிப்போங்கள். இனி ஒருபோதும் அவளுக்குள் பிரவேசியாதேயுங்கள்" என்ற எனது தகப்ப னாரின் வார்த்தைகளைக் கேட்டதும் அவைகள் மொத்தம் 12 பிசாசுகள் அவளிடமிருந்து ஓடிவிட்டன.

உடனடியாக அந்தப் பெண் பூரண விடுதலை பெற்று தான் பிறந்த மேனியின் அலங்கோலமாக இருப்பதைக் கண்டு பெரிதும் வெட்கமடைந்து அந்த அறையிலிருந்து வெளியே ஓடினாள். அதைக் கண்ட அவளுக்குப் பாதுகாவலாக இருந்த மூன்று வாலிபரும் அவளது பின்னாக ஓடத் தொடங்கிய போது எனது தகப்பனார் அவர்களைத் தடுத்து நடந்த தேவனுடைய அதிசய செயலை அவர்களுக்கு எடுத்துக் கூறினார்கள். 10 நிமிடங்கள் சென்ற பின்னர் ஒரு படுக்கை அறையின் கதவு திறக்கப்பட்டது. அந்த அறையிலிருந்து ஒரு இளம் பெண் வெளியே வந்தாள். அவளது காலடிகள் கீழே படிக்கட்டுகளில் இறங்கிச் செல்லுவது கேட்டது. அதற்கப்பால் எனது தகப்பனார் கீழ் அறைக்கு இறங்கிச் சென்றார். அங்கே அந்த வீட்டின் குடும்பத்தினருடன் அவர்கள் அளித்த சந்தோசமான தேயிலைப்பான விருந்தில் அவர்கள் கலந்து கொண்டார்கள். ஒரு தகப்பன், தாய், ஒரு அழகான இனிமையான இளம் குமாரத்தி. எத்தனை ஆனந்த பரவசக்காட்சி அது! பதினைந்து நிமிடங்களுக்கு முன்னர்தான் அவள் 12 கொடிய பேய்களின் கோரப் பிடியில் சிக்கித் தவித்து சின்னா பின்னமாக சீரழிக்கப் பட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் இப்பொழுதோ அவள் அடக்க ஒடுக்கமும், சாந்தமுமான அன்பு மகள்!

எனது தந்தை வீட்டுக்கு வந்ததும் "மகளே அலீஸ் எத்தனை மனோகரக் காட்சி அது என்று நீ எண்ணுகின்றாய்! ஆ, இயேசு இரட்சகர் எத்தனை அதிசயமான அன்பின் தேவன்!" என்று மிகுந்த பூரிப்புடன் சொன் னார்கள்.

பட்டணத்தின் எளிமையான சேரிப்பகுதிகளுக்கு சுவிசேஷத்தை அறிவிக்க விக்கிள்ஸ்வொர்த் செல்லும்போது அந்தப் பகுதியிலுள்ள மக்கள் உடுத்துவதற்கு போதுமான உடையில்லாமல் இருப்பதை அறிந்த அவர் தனது உடம்பிலும் குளிரைத் தாங்கிக் கொள்ளக் கூடிய ஓவர்கோட் போடாமல் சென்று அந்த ஏழை மக்கள் குளிரை அனுபவிப்பதைப் போலவே அவரும் அனுபவித்து இரட்சகர் இயேசுவை அவர்களுக்கு பிரசிங்கிப்பார்.

அவர் எந்த ஒரு மனிதனிலும் அவனது ஆள், அந்தஸ்து, பட்டம், பதவி பார்த்து மதிப்புக் கொடுப்பவரல்ல. ஏழையிடம் எப்படி அவர் நடந்தாரோ அப்படியேதான் ஐசுவரியவானிடமும் நடந்து கொண்டார். அவரிடம் ஏற்றத் தாழ்வுகள் எதுவும் கிடையாது. ஒரே ஒரு வித்தியாசம் என்னவெனில், ஏதுமற்ற ஒரு ஏழையைக் கண்டால் அவனுக்கு ஏதாவது உதவி செய்து அவனைப் போஷிப் பார்.

அடுத்த இதழில் தொடரும்

நன்றி: தேவ எக்காளம்

# Christian girls in a sexy world - FIONA DEWHURST

Each day we are being fed messages about how girls and women should be. The world shouts out that all women are and should be sexy. It is in the television shows and movies we watch, the internet sites we browse, the songs we listen to, the magazines we flip through and even on the billboards we drive by every day. The world tells us that the ideal woman is hot, sexy, sassy and on the prowl.

At school the message is no different. When I was at school, social groups were roughly divided by the clothes girls wore. Generally the shorter the skirt and more flimsy the blouse, the more popular you were with the girls and the more attention you received from boys – I gather the world hasn't changed much since I left school. The messages we receive at school is that if you dress sexy and engage in sexual behaviour the more popular you are in the social scheme. It is a case of the "survival of the prettiest".

***However, these messages are not what God tells his daughters.***

**Meaning**

Your worth and value are not based on your body nor on being sexy. We need to get real about this. Genesis 1:27, 31 and Genesis 2:23-25 express the goodness of our physical bodies which God created. We are made in the image of God and this should be where our value is found. However, we do live in a fallen world where the goodness of creation and relationship have been broken. In our obsession with our bodies and clothing to gain value and acceptance, we make idols of ourselves. We need to realign ourselves with God's values.
1 Samuel 16:7 expresses that while humans look at outward appearance, *God is concerned with our heart and character more than our bodies or clothes.* Furthermore, this side of the cross, our identity as Christians lies in Christ and not our outward appearance. We need to be counter-cultural! God loves us (1 John 4:6), has chosen us (Ephesians 1:4) and wants us to be conformed to the image of his son (Romans 8:29) and not the ideal body image. Remind yourself and your sisters that you are a dearly loved child of His.



**Modesty**

The Bible teaches quite clearly on modesty and sexuality. Ephesians 5:3 says *'But among you there must not be even a hint of sexual immorality.'* This 'hint' includes both our actions and our appearance. God desires that sex, a good thing created by Him, be enjoyed only in a man-woman marriage relationship. Genesis 2:24 talks of the beautiful union between a man and his wife as does Song of Songs. Elsewhere the Bible warns of the consequences of not respecting the place of sex within marriage such as Hebrews 13:4. Women are encouraged also to dress modestly and develop inner beauty, (1 Peter 3:3-6). This is what God desires for his daughters – not because he is a killjoy but because he loves us and in fact knows what will bring us more joy!

**Men**

Girls – we need to get real about the effect our bodies

# சுகம் பெற வேண்டுமா?




**மன்னிப்பு:** இது மிகவும் முக்கியமானது. நீங்கள் உங்கள் எதிராளியை, உங்கள் மீது வெறுப்புக் கொண்டவர்களை, உங்களுக்கு தவறு செய்தவர் களை, உங்கள் உள்ளச் சிறையில் இருந்து விடுதலை செய்யாத வரை உங்கள் சரீரத்தின் சுகத்தைப் பெறவே முடியாது. மன்னிப்பே சரீர சுகத்தின் முதல் மருந்து- மத்தேயு 6:14-15



**விசுவாசம்:** உங்கள் நோய்களுக்காக, பாவங்களுக்காக, மீறுதல்களுக்காக, அக்கிரமங்களுக்காக, அநியாயங்களுக்காக இயேசுவானவர் சிலுவையில் அறையுண்டு, மரித்து, மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார் என்பதையும், அவருடைய தழும்புகளினால் சுகமடைந்திருக்கிறீர்கள் என்பதையும் விசுவாசிக்க வேண்டும் - 1 பேதுரு 2:23



அறிக்கையிடல்: இயேசுவானவர் தம்மிடம் சுகம் பெறவந்தவர்களைப் பார்த்து உங்கள் விசுவாசத்தின்படி ஆகக்கடவர் என்றே கூறினார். உங்கள் விசுவாசம் உங்களை சுகத்திற்கு நேராய் நடத்தும். நீங்கள் தினமும் தேவனுடைய வாக்குத்தத்தங்களைப் பற்றிக் கொண்டு, அறிக்கையிடுவீர்களானால் சரீரத்தில் சுகம் நிச்சயமே- ரோமர் 10:17

and actions have on men. If you dress sexy you may receive unwanted attention, or may become tempted to become involved in ungodly sexual behaviours. Furthermore, we need to love our Christian brothers at all times – not just youth group or church!

Sometimes we would like to argue that it is our right to wear what we want and it is the boys' fault for thinking such "bad" things. This is not Christ-like. We need to lay down our lives (and our rights) to love others and encourage them onto godliness. When we dress sexy this isn't helping our brothers. Think about what messages you are sending when you are buying clothes and getting dressed. Girls, let's be real with each other too and point out when your sister may be inadvertently immodest especially when the weather warms up.

**Marriage**

Sex and being sexy has a time and place that God is all for – within the marriage relationship. Baring our bodies and engaging in sexual practices belong there. I urge you sisters to wait till then to be a sexy Christian girl. Any hint before then is only damaging to your brothers and yourself. Be girls who seek to love God with their hearts, minds, bodies and clothes.

1 TIMOTHY 2:9
IN LIKE MANNER ALSO, THAT WOMEN ADORN THEMSELVES IN MODEST APPAREL...

## அந்த 13 ஆண்டுகள்

Shalom Family Enrichment Ministries

Reaching out people

நான் ஒர் M.B.B.S. மருத்துவர்.. D.Ch.ம் முடித்துள்ளேன். என் பெற்றோர் எனக்கு திருமண ஒழுங்கு செய்த போது "பிறகு பார்த்துக் கொள்ளலாம்" என்று பல ஆண்டுகள் தள்ளிவிட்டேன்... திருமணம் செய்துகொள்ள தயாரானபோது எனக்கு வயது 32 தாண்டிவிட்டது. 32 வயதிற்கு மேல் எங்கள் உறவின் முறையில் மருத்துவர் யாரும் கிடைக்கவில்லை. எனக்குக் கிடைத்த கணவர் டாக்டர் கோபால். பிரசித்தி பெற்ற டெல்லி கல்லூரி ஒன்றின் Senior Lecturer. வயது 35. அப்பப்பா..எப்படியோ எங்கள் ஆலயத்தில் வைத்து திருமணத்தை முடித்தோம். இரண்டே மாதத்தில் என் கனவுக்கோட்டை உடைய ஆரம்பித்தது.

என் கணவர் தெய்வத்தை நம்பாதவர்.. ஒரிரு மாதங்கள் என் கட்டாயத்தின் பேரில் என்னுடன் ஆலயத்திற்கு வந்தார்.. பின் அநேக குற்றச்சாட்டுகள் சொல்லி ஆலயத்திற்கு என்னுடன் வருவதை நிறுத்திவிட்டார். மாறாக.. எங்கள் வீட்டில் "பேய்" பிசாசுகள் இருக்கிறது என்று மந்திரக்காரர்கள், பூஜைகள் எனக்குக தெரியாமலே செய்ய ஆரம்பித்தார். அவரது மாத வருமானமோ ரூ. 20,000.க்கும் குறைவே, என் வருமானம் சுமார் ரூ. 40,000 க்கும் அதிகம். ஒரே ஆண்டில் எங்களுக்கு ஒர் அழகிய பெண் குழந்தை... ஏஞ்சல் என்று பெயரிட்டோம்.

சில மாதங்களில் என் குடும்பம் சிதைய ஆரம்பித்தது.. ஒன்றுமில்லாத காரணங்களை எல்லாம் சொல்லி, தினமும் எங்கள் வீட்டில் புயல் அடிக்க ஆரம்பித்தது.. என்னால் தாங்கவே முடியவில்லை.. பதினெட்டே மாதங்களில் நாங்கள் பிரிந்தே விட்டோம். பலர் முயற்சி எடுத்தனர்..யாரையும் என் கணவர் பேச ஒட்டவே இல்லை.. தனித்தனியாக வாழ ஆரம்பித்தோம். என் மகளும் என் மருத்துவப்பணியுமே எனக்கு ஆறுதல் அளித்தது. டெல்லியில் ஒரு பிரசித்தி பெற்ற பள்ளியில் எல்.கே.ஜி- யில் சேர்த்தேன்.. மற்றபிள்ளைகளின் அப்பா பள்ளிக்கு வரும்போதெல்லாம் "என் அப்பாவைக் காணோமே" என்பாளாம், என்னிடம் ஒர் நாள் மழலை மொழியில் கேட்டே விட்டாள் "அம்மா, நம்ம அப்பா காணாமல் போய்விட்டாரா?.




என் கன்னங்களில் கண்ணீர் வடிந்தது, "அப்ப, ஜெபம் பண்ணலாமா? என்று சொல்லி.. படுக்கையை விட்டு எழுந்தாள் .. படுக்கையிலேயே முழங்கால் இட்டாள் ..நானும் அவளோடு அவளுக்காக முழங்கால் போட்டேன். Jesus, எனக்கு அப்பா வேண்டும்.. கூட்டிக்கிட்டு வாங்க.. ஆமென்"..ஜெபித்த உடனே தூங்கிவிட்டாள்.. அன்று இரவு ஆரம்பித்த ஏஞ்சலின் ஜெபம் 9 ஆண்டுகள் தொடர்ந்தது, ஜெபித்துக் கொண்டே இருந்தாள்.. அடிக்கடி ஜெபிப்பாள்.. எனக்கும் ஆறுதல் சொல்வாள்.

4 ஆண்டுகளுக்கு முன்.. அடுத்த தெருவில் என் கணவர் கோபால் வீடு எடுத்து குடி வந்ததைக் கண்டோம். எனக்கு ஒரே ஆச்சரியம். ஒர் நாள் மாலை நானே ஏஞ்சலுக்கு அவரைக் காட்டிக்கொடுத்தேன்.. அன்றிலிருந்து ஏஞ்சல் அவர் வீட்டுக்கு அடிக்கடி போவாள். விளையாடுவாள்.. வீட்டில் வந்து கண்ணீரோடு ஜெபிப்பாள். என் பெயரைக் கேட்டாலே கோபப்படுவாராம். இன்று.. 13 ஆண்டுகளுக்குப் பின் என் கணவர் என்னோடிருக்கிறார். இப்போது நான் அடுத்த குழந்தைக்காக எதிர்நோக்கியுள்ளேன். என் பிள்ளை ஏஞ்சலின் ஜெபத்தைக் கேட்ட தேவனுக்கு கோடான கோடி ஸ்தோத்திரம்.

யாக்கோபு 4: 10. **கர்த்தருக்கு முன்பாகத் தாழ்மைப்படுங்கள், அப்பொழுது அவர் உங்களை உயர்த்துவார்.**

**www.praisetabernacle.org**

**PLEASE PRAY FOR JAN 13-16 PASTOR'S CONFERENCE @ KILINOCHI - SRI LANKA.**

MISSIONARY BIOGRAPHY

# C.T. STUDD

## CRICKETER and MISSIONARY





**Forward Ever, Backward Never!**
**"Some wish to live within the sound**
**Of Church or Chapel bell;**
**I want to run a Rescue Shop**

Charles T. Studd was a servant of Christ who faithfully served His Saviour in China, India, and Africa. As Alfred Buxton in the forward to the book entitled *C.T. Studd: Cricketer & Pioneer* by Norman Grubb states:

"C.T.'s life stands as some rugged Gibraltar — a sign to all succeeding generations that it is worth while to lose all this world can offer and stake everything on the world to come. His life will be an eternal rebuke to easy-going Christianity. He has demonstrated what it means to follow Christ without counting the cost and without looking back.

C.T. was essentially a cavalry leader, and in that capacity he led several splendid charges. Three in particular stand out: when C.T. and Stanley Smith led forth the Cambridge Seven to China, in 1885; ten years later when C.T. toured the American Universities at the start of the Student Volunteers; and when in 1910 he initiated the campaign for the region between the Nile and Lake Chad (the largest unevangelized region in Africa at the time)..."

As a soldier of the Cross, C.T. is remembered for "his courage in any emergency, his determination never to sound the retreat, his conviction that he was in God's will, his faith that God would see him through, his contempt of the arm of the flesh, and his willingness to risk all for Christ."

Charles Thomas Studd was born in England in 1860, one of three sons of a wealthy retired planter, Edward Studd, who had made a fortune in India and had come back to England to spend it. After being converted to Christ during a Moody-Sankey campaign in England in 1877, Edward Studd became deeply concerned about the spiritual welfare of his three sons and influenced them for the cause of Christ before his death two years later.

By the time C.T. was sixteen he had become an expert cricket player and at nineteen was captain of his team at Eton College. He was further educated at Trinity College, Cambridge where he was also recognized as an outstanding cricketer.

C.T. was saved in 1878 at the age of 18 when a visiting preacher at their home caught C.T. on his way to play cricket. "Are you a Christian?" he asked. C.T's answer not being convincing enough, the guest pressed the point and C.T. tells what happens as he acknowledges God's gift of eternal life received through faith in Christ: "I got down on my knees and I did say 'thank you' to God. And right then and there joy and peace came into my soul. I knew then what it was to be 'born again,' and the Bible which had been so dry to me before, became everything." His two brothers were also saved that same day!

But there followed a period of six years in a backslidden state. C.T. relates: "Instead of going and telling others of the love of Christ, I was selfish and kept the knowledge to myself. The result was that gradually my love began to grow cold, and the love of the world began to come in. I spent six years in that unhappy backslidden state." The Lord in His goodness worked in his life and after a serious illness of his brother and his going to hear D.L. Moody the Lord met C.T. again and restored to him the joy of His salvation.

"Still further, and what was better than all, He set me to work for Him, and I began to try and persuade my friends to read the Gospel, and to speak to them individually about their souls."

"I cannot tell you what joy it gave me to bring the first soul to the Lord Jesus Christ. I have tasted almost all the pleasures that this world can give ... but those pleasures were as nothing compared to the joy that the saving of that one soul gave me."

The Lord continued to work in his life, and led C.T. to go to China. C.T. seeking to comfort his mother wrote: "Mother dear, I do pray God to show you that it is such a privilege to give up a child to be used of God to saving poor sinners who have never even heard of the name of Jesus." C.T. was one of the "Cambridge Seven" who offered themselves to Hudson Taylor for missionary service in the China Inland Mission and in February, 1885, sailed for China. Once there, **they followed the early practice of the Mission by living and dressing in Chinese fashion.** He and the others began at once to learn the language and to further identify themselves with the nationals by wearing Chinese clothing and eating with them.

**It was while in China that C.T. reached the age (25 years old) in which according to his father's will he was to inherit a large sum of money. Through reading God's Word and much prayer, C.T. felt led to give his entire fortune to Christ!** "This was not a fool's plunge on his part. It was his public testimony before God and man that he believed God's Word to be the surest thing on earth, and that the hundred fold interest which God has promised in this life, not to speak of the next, is an actual reality for those who believe it and act on it."

**Before knowing the exact amount of his inheritance, C.T. sent £5000 to Mr. Moody, another £5000 to George Müller (£4000 to be used on missionary work and £1000 among the orphans); as well as £15,000 pounds to support other worthy ministries. In a few months, he was able to discover the exact amount of his inheritance and he gave some additional thousands away, leaving about £3400 pounds in his possession.**

Three years after arriving in China, C.T. married a young Irish missionary from Ulster named Priscilla Livingstone Stewart. Just before the wedding he presented his bride with the remaining money from his inheritance. **She, not to be outdone, said, "Charlie, what did the Lord tell the rich young man to do?" "Sell all." "Well then, we will start clear with the Lord at our wedding." And they proceeded to give the rest of the money away for the Lord's work!**

They served the Lord together in inland China through many perils and hardships until in 1894 after ten years in China, ill health forced the Studds to return to England, where they turned their property over to the China Inland Mission.

From 1896-1897, C.T. toured American universities in behalf of the newly formed Student Volunteer Movement. C.T. describes one of the meetings at Bucknell College in Pennsylvania:

**"Had a splendid students' meeting at 6:30. The Lord was greatly with us. After some hymns and a prayer, I spoke for about 30 minutes; then all got on knees, and one after another gave themselves to God in such sentences as 'Lord, take me as I am,' 'I will go with Thee, Lord Jesus.'** There must have been a score of them. Oh, surely that is the sweetest music that can ever be heard by any ears, and if sweet to us, how much sweeter to Jesus. Afterwards I got them to sing a hymn:
**"The cleansing blood I see, I see,**
**I plunge, and oh, it cleanseth me."**

In 1900 the Studd family went to South India where C.T. served as a pastor of a church in Ootacamund for six years. From the time of his conversion, C.T. had felt the responsibility upon their family to take the Gospel to India.

China, India, and then the heart of Africa. After their return home to England in 1906, C.T. was stirred by the need for missionary pioneer work in Central Africa. **But again the path was not without obstacles. Penniless, turned down by the doctor, dropped by a Committee of businessmen who had agreed to support him, yet told by God to go, once more C.T. staked all on obedience to God.** As a young man he staked his career, in China he staked his fortune, now he staked his life. His answer to the Committee was; **"Gentlemen, God has called me to**

go, and I will go. I will blaze the trail, though my grave may only become a stepping stone that younger men may follow." Leaving his wife and four daughters in England, C.T. sailed, contrary to medical advice, for the heart of Africa in 1910, where he continued to work until his death in 1931.

C.T. bore much fruit for the Saviour while in Africa as he endured weakness and sickness; loosing most of his teeth and suffering several heart attacks; but he endured hardness as a good soldier of the Lord Jesus Christ!

In a letter home, C.T. gave a last backward look at the outstanding events of his life:

"As I believe I am now nearing my departure from this world, I have but a few things to rejoice in; they are these:

1. That God called me to China and I went in spite of utmost opposition from all my loved ones.
2. That I joyfully acted as Christ told that rich young man to act.
3. That I deliberately at the call of God, when alone on the Bibby liner in 1910, gave up my life for this work, which was to be henceforth not for the Sudan only, but for the whole unevangelized World.

My only joys therefore are that when God has given me a work to do, I have not refused it."

Shortly after 10:30 p.m. on a July day in 1931, C.T. Studd went home to be with His Lord whom he had loved so dearly and served so faithfully! The last word he spoke was "Hallelujah"!

A comprehensive biography of C.T. Studd can be found in the book intitled, *C.T. Studd: Cricketer & Pioneer* by Norman P. Grubb from which all quotes were taken. More Missionary biographies.

Don't go into the study to prepare a sermon -- that's nonsense. Go into your study to God and get so fiery that your tongue is like a burning coal and you have got to speak- C.T.Studd



**பார்வையாளராக அல்ல, பங்குத்தாரராக அழைக்கின்றோம். உங்கள் உதாரத்துவமான கொடுப்புக்களால் பாக்கிஸ்தான் ஊழியங்களைத் தாங்க அழைக்கின்றோம்! விபரங்களுக்கும், முஸ்லீம் சகோதர மக்கள் மத்தியில் ஊழியம் செய்வதற்கும் நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய எண் : 416 554 8448**

# Sleeping through the storm



A young man applied for a job as a farmhand. When the farmer asked for his qualifications, he said, "I can sleep through a storm."

This puzzled the farmer... but he liked the young man. So he hired him.

A few weeks later, the farmer and his wife were awakened in the night by a violent storm ripping through the valley. He leapt out of bed and called for his new hired hand, but the young man was sleeping soundly.

So they quickly began to check things to see if all was secure. They found that the shutters of the farmhouse had been securely fastened. A good supply of logs had been set next to the fireplace.

The farmer and his wife then inspected their property. They found that the farm tools had been placed in the storage shed, safe from the elements. He sees that the bales of wheat had been bound and wrapped in tarpaulins.

The tractor had been moved into its garage. The barn was properly locked tight. Even the animals were calm and had plenty of feed. All was well. The farmer then understood the meaning of the young man's words, "I can sleep through a storm." Because the farmhand did his work loyally and faithfully when the skies were clear, he was prepared for any storm. So when the storm did actually break, he was not concerned or afraid. He could sleep in peace.

**Moral:::**
If we tend to the things that are important in life,
if we are right with those we love and behave in line with our faith,
our lives will not be cursed with the aching throb of unfulfilled business.
Our words will always be sincere, our embraces will be tight.
We will never wallow in the agony of 'I could have, I should have.'
We can sleep in a storm.
And when it's our time to go, our good-byes will be complete.
*-- Moral by Rick, from his Blog, "Life in Seminole Heights"*



A boy was watching his father, a pastor, write a sermon. "How do you know what to say?" he asked. "Why, God tells me." "Oh, then why do you keep crossing things out?



After a church service on Sunday morning, a young boy suddenly announced to his mother, "Mom, I've decided to become a minister when I grow up." The mother replied, "That's okay with us, but what made you decide that?" "Well," said the little boy, "I have to go to church on Sunday anyway, and I figure it will be more fun to stand up and yell, than to sit and listen."

A little boy was attending his first wedding. After the service, his cousin asked him, "How many women can a man marry?" "Sixteen,"
the boy responded. His cousin was amazed that he had an answer so quickly. "How do you know that?" "Easy," the little boy said.
"All you have to do is add it up, like the Bishop said:
4 better, 4 worse, 4 richer, 4 poorer







A little girl became restless as the preacher's sermon dragged on and on. Finally, she leaned over to her mother and whispered, "Mommy, if we give him the money now, will he let us go?"

The Sunday school lesson for the first graders was on the plan of salvation. The teacher asked, "If I sold my house and my car, had a big garage sale, and gave all my money to the church, would I get into heaven?"
"No!" all the children answered.
"If I cleaned the church every day, mowed the yard, and kept everything neat and tidy, would I get into heaven?"
Again, the answer was, "No!"
"Well," she continued, "then how can I get to heaven?"
One boy confidently answered, "You've gotta be dead!"








# நம்முடைய நண்பன் யார்

நம்முடைய நண்பன் யார் என்பதை அறிந்துகொள்வதற்கு முன்பாக எதிரி யார்? என்பதை அறிந்திருக்க வேண்டும். எதிரியை இனம் கண்டு கொள்ளாதவன் போர்களத்தில் தோல்வியை சந்திப்பது நிச்சயம்.

இது யாருக்குதான் தெரியாது. புதிதாக எதாவது இருந்தால் சொல்லுங்கள் என்று சிலர் சொல்லுவது காதில் விழுகிறது. பொறுமையாக இருங்கள் அதைத்தான் சொல்லவருகிறேன். இன்றைக்கும் நம்மில் சிலர் நம்முடைய எதிரியை வெளியில் தேடிக்கொண்டிருக்கிறோம். உண்மை என்னவென்றால் எதிரி நமக்கு வெளியில் இல்லை. ஆனால் நமக்கு உள்ளேதான் எதிரி தங்கி இருக்கிறான். அந்த எதிரியைத்தான் பரிசுத்த வேதாகமம் (பைபிள்) "பாவம்'' என்று அடையாளப்படுத்தி காண்பிக்கிறது.

இருங்க, இருங்க உடனே பக்கத்தை மூடிவிடாதீங்க. உங்களை ஆய்வு செய்வதற்கும், நம்மை மறு ஆய்வு செய்வதற்கும்தான் இந்த பதிவு. "நான் செய்கிறது எனக்கே சம்மதியில்லை; நான் விரும்புகிறதைச் செய்யாமல், நான் வெறுக்கிறதையே செய்கிறேன்'' (ரோமர் 7:15). என்று வேதாகமம் மனிதனின் உள்ளத்தைக் குறித்து சொல்கிறது. வேதாகமம் சொல்கிறவைகள் நம்முடைய வாழ்க்கையைத்தான் படம் பிடித்து காண்பிக்கிறது. நமக்கே தெரியாமல் நம்முடைய உள்ளத்தையும், நம்முடைய வாழ்க்கை (யாருக்கும் தெரியாத அந்தரங்கம்) முழுவதையும் படம் பிடித்து காண்பித்தால் எப்படி இருக்குமோ, அதுதான் பரிசுத்த வேதாகமம். வேதாகமத்தில் நம்மை பார்க்கலாம்.

மனிதன் தான் பெற்ற வெற்றியை பறைசாற்றுவான். தன்னுடைய தோல்வியை யாருக்கும் தெரியாமல் மறைத்துவிடுவான். இது மனிதனின் இயற்கை குணம். இதில் ஒருவரையும் குற்றப்படுத்தி பயன் இல்லை. தோல்வியின் ஆரம்பம் எது என்று ஒருவன் கண்டு பிடித்து விட்டால் அவனை ஜெயிக்க ஒருவனாலும் முடியாது.

"நன்மை செய்ய வேண்டுமென்கிற விருப்பம் என்னிடத்திலிருக்கிறது, நன்மை செய்வதோ என்னிடத்திலில்லை. ஆதலால் நான் விரும்புகிற நன்மையைச் செய்யாமல், விரும்பாத தீமையையே செய்கிறேன். அந்தப்படி நான் விரும்பாததை நான் செய்தால், நான் அல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற பாவமே அப்படிச் செய்கிறது'' (ரோமர் 7:18-20) என்று வேதாகமம் சொல்வதை வெளிப்படையாக ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏன் என்றால் இதுதான் உண்மை. இப்பொழுது சிந்தித்து பாருங்கள். நீங்கள் உங்களை இயக்குகிறீர்களா? அல்லது உங்களுக்குள் இருந்து வேறு யாராவது இயக்குகிறார்களா?. நீங்க உள்ளத்தில் வேண்டாம் என்று நினைப்பவைகளை செயலில் செய்து விடுகிறீர்களா? உங்கள் இயக்கம் உங்களிடத்தில் இல்லை. நீங்கள் நன்மை செய்ய வேண்டும் என்று மனதில் தீர்மானிக்கிறீர்கள். ஆனால் செயல்படுத்த முடியவில்லையா? சந்தேகமே வேண்டாம். உங்கள் இயக்கம் உங்களிடத்தில் இல்லவே இல்லை. இந்த வார்த்தைகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறீர்கள் ஆனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லையா?. பரவாயில்லை தொடர்ந்து வாசியுங்கள்.

எதிரி ஒருவன்தான். அந்த எதிரியின்செயல்பாடுகள் பல. அந்த எதிரி பாவம் என்பதை அறிந்து கொண்டோம். அந்த பாவத்தின் செயல்பாடுகள் என்னென்ன அதின் செயல்பாடுகள் எப்படிப்பட்டது. அதை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக அறிந்து வைத்திருக்கிறார்கள்.எதிரி எந்த வகையில் எல்லாம் செயல்படுகிறான் என்பதை முழுமையாக அறிந்தால்தான் வாழ்க்கையில் முழுவெற்றியை நம்மால் பெற்று அனுபவிக்கமுடியும். வாங்க சேர்ந்து தேடுவோம். எதற்கு என்று கேட்கிறீர்களா? அழிக்கத்தான்.

### உணர்வுகளில் வெளிப்படும் எதிரி

"மனுஷனுக்குள்ளே இருந்து புறப்படுகிறதே மனுஷனை தீட்டுப்படுத்தும்'' (மாற்கு 7:20) என்று இயேசு கிறிஸ்து சொல்லுகிறார். தீட்டுப்படுத்தும் என்ற வார்த்தைக்கு, வீழ்த்தும் அல்லது தோல்வியடைய செய்யும் என்பதுதான் நேரடி பொருள். எது எல்லாம் மனிதனுக்கு உள்ளாக இருந்து புறப்படுகிறது. கடுங்கோபம், (கண்டிக்கும் போது வெளிப்படுவது அல்ல) பொறாமை, கசப்பு, பொய், முறு முறுத்தல், எரிச்சல், சோம்பேறித்தனம், கோள்சொல்லுதல்., தற்பெருமை, தன்னலம், அவதூறு பேசுதல், பிறரை உதாசீனப்படுத்துதல், காம இச்சை, (தேவனின் நியமனத்துக்கு உட்பட்ட, குடும்ப வாழ்வில் ஈடுபடும் போது ஏற்படுவது அல்ல) விரோதம். இப்படிப்பட்ட செயல்கள் எல்லாம் உணர்வுகளில் இருந்து வெளிப்படுவது.

இப்படிப்பட்ட பாவங்களை அறிந்து நாம் வீழ்த்தாவிட்டால் அது வேகமாக நம்மை அடிமைப்படுத்திவிடும் அல்லது வீழ்த்திவிடும். இது நுட்பமாக அறிந்து கொள்ள வேண்டியது. பிறரைப் பார்க்கும்போது நமக்கு "பளிச்'' என்று தெரிந்து விடும் அல்லது கண்டுபிடித்து விடுவோம். இதில் ஆபத்து என்னவென்றால் நமக்குள் இருப்பது நமக்கு தெரியாமல் இருப்பதுதான். அதைவிட ஆபத்தானதும், தப்பிக்க முடியாததும் என்னவென்றால் இவை எல்லாம் நமக்குள் இருந்தும் "எனக்கு உள்ளே இதெல்லாம் இல்லை'' என்ற எண்ணம்தான். இவ்வித எண்ணம் உள்ளவர்களுக்கு இயேசு கிறிஸ்து உதவி செய்ய முடியாது. பாவத்தை அறிக்கை செய்கிறவர்களுக்குதான் அவர் பாவங்களை மன்னித்து, அப்படிப்பட்ட பாவத்திலிருந்து தூக்கி விடுகிறார். "நான் மற்றவர்களைப் பார்த்து பாவிகள், என்று சொல்வதால் எனக்கு எந்த பயனும் இல்லை. எனக்குள் இருக்கும் பாவத்தை அறிந்து, அல்லது கண்டு பிடித்து அதிலிருந்து விடுபட இயேசு கிறிஸ்துவை நான் சார்ந்து கொள்ளும் போது, அதுதான் எனக்கு பலனை கொடுக்கும். இதை நாம் ஒவ்வொருவரும் அறிந்திருக்க வேண்டும்.

**ஒழுக்கத்தை கெடுக்கும் எதிரி**

சிலர் வசதியாக"மனுஷனுக்குள்ளே இருந்து புறப்படுகிறதே மனுஷனை தீட்டுப்படுத்தும்'' என்ற வார்த்தையை தங்களுக்கு சாதகமாக பயன்படுத்தி, குடிப்பது, சிகரெட், பீடி புகைப்பது, போதையூட்டும் லகரி பொருள்களைப் பயன்படுத்துவது, விரோதித்து சண்டையிடுதல், அடித்தல், களியாட்டுக்கள், தேவையற்ற வார்த்தைகளால் திட்டுதல், மற்றவர்களை முகம் சுருங்க செய்யும் வார்த்தைகள். (கெட்ட வார்த்தைகள்) இது போன்ற காரியங்களை நியாயப்படுத்தி பேசுவார்கள். தனி மனித ஒழுக்கத்தை தேவன் அதிகமாக எதிர்பார்க்கிறார். இது போன்ற செயல்களை நாகரீகம் என்றும், சந்தோஷத்தை வெளிப்படுத்தும் செயல் என்றும் சொல்லிக்கொண்டு, நமது ஒழுக்கத்தை கெடுத்துக்கொள்ளக்கூடாது.

ஒழுங்கீனமான செயல்கள் எல்லாம் பாவமே. இதில் சாட்டு போக்கு சொல்லுவதற்கு ஒன்றும் இல்லை. தங்களை தலைவர்கள், முன்மாதிரி என்று காண்பிக்கிறவர்களையும் கெடுக்கும் எதிரிதான் இவைகள் எல்லாம். விளையாட்டாக ஆரம்பித்து, சிலருடைய வாழ்க்கையையே அழித்த பெருமை இவ்வித ஒழுங்கீனமான எதிரிக்கு உண்டு. தங்கள் பாரம்பரியங்களை காக்க போராடுகிறவர்களும், கலாச்சார சீர்கேட்டை பேசுகிறவர்களும், மக்களை முன்நின்று நடத்த முயற்சிப்பவர்களும் கூட இந்த பொல்லாத எதிரியின் தாக்குதலுக்கு உட்பட்டவர்களாகவே இருக்கிறார்கள் என்பதுதான் வேதனை தரக்கூடியதாக இருக்கிறது. இதெல்லாம் சட்டம் போட்டு திருத்தக் கூடியதோ, கண்டித்து திருத்தக்கூடியதோ அல்ல, ஒழுக்கம் தானாக வரக்கூடியது.

ஒழுங்கீனமான இப்படிப்பட்ட செயல்களை செய்ய வைக்கும் இந்த பாவ அடிமைத்தனம் என்ற எதிரியையும் வீழ்த்த நமக்கு எல்லா விதத்திலும் உதவி செய்ய இயேசு கிறிஸ்து தயாராக இருக்கிறார். இதில் இருந்து விடுபடவேண்டும் என்ற எண்ணமும், அதற்குண்டான செயல்களும் இருந்தால் போதும். மற்றதை ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து பார்த்துக்கொள்வார். தனி மனித ஒழுக்கம் நம்மை மட்டும் அல்ல, நமது குடும்பத்தையும், நமது தேசத்தையும், முன்னேற்றப்பாதையில் நடத்தும். "நான் எல்லாம் முழு நேர குடிகாரனோ, புகைப்பிடிக்கிறவனோ, லகரி பொருள்களை பயன்படுத்துகிறவனோ, களியாட்டில் ஈடுபடுகிறவனோ இல்லை. எப்போதாவது, சில பண்டிகை நேரத்தில், நண்பர்களோடு இணைந்திருக்கும் சமயத்தில், சுற்றுலா செல்கிற வேளைகளில் மட்டும்தான். மற்ற படியெல்லாம் இல்லை'' என்று தங்களை நியாயப்படுத்துகிறவர்களும் உண்டு. எப்படி பார்த்தாலும் எதிரி, எதிரிதான். அவன் வீழ்த்துவதற்கு தயாராக இருக்கிறான் என்பதை மறுக்க முடியாது. வீழ்த்துவதற்கு சரியான வேளையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான் என்பதுதான் உண்மை. எதிரி என்று தெரிந்தால் முந்தி அடித்து வீழ்த்துவதே மிக மிக நல்லது.

**பாலியல் உறவில் செயல்படும் எதிரி**

தனிமனிதன், தேசம் கடந்து உலகம் முழுவதும் வேகமாக பரவிகொண்டிருக்கும் எதிரி. உணர்விலிருந்து வெளிப்பட்டு, செயலில் வெளிப்படும் எதிரி. இது ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்ற தேவனுடைய முறைமைகளை உடைத்து, விபச்சாரம், ஓரின சேர்க்கை, திருமணத்திற்கு முன் பாலியல் உறவில் ஈடுபடுதல், போன்ற இவ்வித வழிகளில் செயல்படும் எதிரியை அடையாளம் கண்டு கொள்ள வேண்டும்.

இந்த எதிரி எதிரில் இருந்தும் தாக்குவான். மறைந்திருந்தும் தாக்குவான். இந்த எதிரியின் தாக்குதல் முதலில் உணர்வுகளில்தான் இருக்கும். அதனால்தான் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து சொல்லும் போது, "ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடே விபசாரஞ்செய்தாயிற்று'' ( மத்தேயு 5:28). சிந்தையில் வரும் போதே நம் தாக்குதலுக்கு தயாராகி அவனை வீழ்த்தி விடவேண்டும். இல்லாவிட்டால் நம்மை செயல்படவைத்து வீழ்த்தி விடுவான் என்று கூறுகிறார்.

போரிடுவதில் பல வகைகள் உண்டு. நேருக்கு நேர் நின்று போரிடுவதுதான் ஒரு போர்வீரனுக்கு பெருமை. ஒரு சில யுத்தத்தில் நிற்பதை விட ஓடி விடுவதுதான் தற்காப்பானது. போர் வீரன் வீரனாக இருப்பது மட்டும் எல்லா நேரமும் வெற்றியை கொடுக்காது. விவேகம் உள்ளவனாக இருப்பதும் அவசியம். இந்த எதிரியை நேருக்கு நேர் நின்று ஜெயித்தவர்களைவிட, விவேகமாக ஓடி தப்பித்தவர்களே அதிகமாக ஜெயித்திருக்கிறார்கள். நாமும் இந்த வழியில் சென்றுதான் வெற்றி பெற்றாக வேண்டும்.

**சமுதாய முறையில் செயல்படும் எதிரி**

மற்றவரை ஏமாற்றுதல், திருடுதல், லஞ்சம் பெறுதல்,தன் கடமையை செய்ய மறுத்தல், சட்டத்தை மீறுதல், பயமுறுத்துதல், நியாயமாய் மற்றவர்களுக்கு கிடைக்க வேண்டியதை தட்டிப்பறித்தல், மற்றவரை குற்றம் சாட்டுதல், உதவி செய்ய முடிந்தாலும் உதவி செய்யாமல் இருத்தல் இது போன்ற செயல்கள் எல்லாம், சமுதாய ரீதியில் செயல்படக்கூடிய எதிரி. இந்த வகையில் செயல்படும் எதிரி மிக மிக தந்திரமானவன். நம்முடைய சூழ்நிலைகளை காண்பித்தே நம்மை அதிகமாக இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபட செய்து, வீழ்த்தப்பார்ப்பான். மேலும் "அவர்களை பார் அவர்களை விட நீ உத்தமனா? பிழைக்க தெரியாத முட்டாள். இது போன்ற வார்த்தைகளை சிலர் மூலமாக பேசவைத்து நம்மை தன்வசப்படுத்தவும் பார்ப்பான். இவன் விரிக்கும் வலை நமக்கு லாபத்தை கொடுப்பது போலவும், நம்மை உயர்த்துவது போலவும் தெரிந்தாலும், அது ஒரு மாய தோற்றமே தவிர உண்மை இல்லை. இந்த எதிரியையும் மிகவும் கவனமாக எதிர்கொள்ளவேண்டும். இல்லை என்றால் எதாவது ஒருவகையில் வீழ்த்திவிடுவான். இப்படிப்பட்ட பாவம் என்ற எதிரியை தலை தூக்கவிடாமல் தொடர் தாக்குதலால் அடித்து வீழ்த்தவேண்டும். அருகில் வராதபடி விரட்டி அடித்துக்கொண்டே இருக்க வேண்டும் அப்பொழுதுதான் நாம் தப்பித்துக்கொள்ள முடியும். இதற்கு இயேசு கிறிஸ்து நமக்கு பாதுகாப்பாக இருக்கிறார். அவருடைய வார்த்தைகள் நமக்கு ஆயுதங்களாக இருக்கிறது.

**வழிபாடுகள் மூலம் செயல்படும் எதிரி**

சிலை வழிபாடு, இயற்கை வழிபாடு, குரு வழிபாடு, பய வழிபாடு, மனிதனை தெய்வமாக வழிபடுதல், இயேசு கிறிஸ்துவின் தெய்வத்துவத்தை மறுதலித்தல், கடவுள் மறுப்பு, இப்படிப்பட்ட வகையில் செயல்படுவதும் பாவம்தான். இவ்வகை எதிரியையும் நாம் அடையாளம் கண்டு கொள்வது நல்லது. இவ்வகை எதிரி நமது உலக வாழ்க்கைக்கும், முடிவில்லா (நித்தியமான) வாழ்க்கைக்கும் எதிராக செயல்படக்கூடியவன். முக்கியமாக நாம் நித்திய வாழ்க்கைக்கு

போகாமல் நம்மை தடுத்து, நித்திய அழிவுக்கு நேராக கொண்டு செல்வதே, இந்த எதிரியின் இலக்காகும்.

அதற்காக எப்படிப்பட்ட செயலை செய்யவும், இந்த எதிரி தயங்குவதில்லை. இவனுடைய தாக்குதல்கள் எல்லாம் நேரடியாக இருக்காது. எல்லாமே மறைமுக தாக்குதல்கள்தான். உதாரணமாக மோதல்கள், கலவரங்கள், மனிதர்களுக்கு, மனிதர் சகோதரத்துவத்தை கெடுத்தல், குழப்பத்தை ஏற்படுத்துதல், அதிகாரத்தை தன்வசப்படுத்துதல் என்று இவனின் தாக்குதல்கள் நீண்டு கொண்டே போகும். இந்த எதிரியோடு யுத்தம் செய்யும் போது நமக்கு எதிராக நம்முடைய நண்பர்களையும், நம்முடைய சகோதரர்களையும், நமது சொந்த பந்தங்களையும் கூட தனது ஆயுதமாக பயன்படுத்தி நமக்கு எதிராக திருப்பி விடுவான். இந்த எதிரியோடு தாக்குதல்களில் ஈடுபடும் முன் இயேசு கிறிஸ்துவின் துணை நமக்கு மிக மிக அவசியம். நம்முடைய சுயமான தாக்குதல்கள் நமக்கு பாதிப்பையும், பயங்கரத்தையும் ஏற்படுத்திவிடும்.

எனவே இப்படிப்பட்ட பலவகைகளில் தனி மனிதனாகிய நமக்குள் செயல்படும் எதிரிகளையும் இதனுடைய செயல்பாடுகளையும் அறிந்து, வீரத்துடனும், விவேகத்துடனும் நாம் அணுகும் போது மட்டும்தான், உண்மையான வெற்றி வாழ்க்கை நமக்கு சாத்தியமாகும். நித்திய வாழ்க்கை உறுதியாகும்.

நன்றி - ஜீவ அப்பம்

# நான் உன்னைத் தெரிந்து கொண்டேன்- ஆகாய் 2:13

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே! கர்த்தரும் மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள். இந்தப் புதிய ஆண்டிலும் உங்களை இந்தச் சஞ்சிகையின் ஊடாக வாழ்த்துவதில் நான்



சந்தோசம்அடைகின்றேன்.

தேவனாகிய கர்த்தருக்குள் வாழ்வது என்பதுதான் நம்முடைய வாழ்வின் சந்தோசம். இந்த உலகத்தில் எவ்வளவு தான் பணம் இருந்தாலும், பொருள் இருந்தாலும், உறவுகள் இருந்தாலும் அவை எதுவுமே நிலையானவை யல்ல. இன்று இருப்பவரிடம் நாளை இருப்பதில்லை. நாளை என்பது சிலருக்கு இருப்பதேயில்லை. வாழ்வும் வளமும் கண்ணாடியின் விம்பம் போல் தான் இருக்கின்றது. இந்தச் சஞ்சலமான உலகில் உறவுகளுக்கு உத்தரவாதம் இல்லை. இன்று நெருங்கியிருந்தவர்கள், நாளை எதிரிகளாகி விடுகின்றார்கள். வாழ்க்கைச் சுமையும், எதிர்பார்ப்புக்களும், ஏக்கங்களும், பெருமூச்சுக்களும் தான் இதன் ஆணிவேராய் இருக்கின்றது. யாரைத் தெரிந்து கொள்ளுவது என்பதில் உண்டாகும் சந்தேகங்கள் எண்ணிலடங்காதவைகள். ஒரு மனிதன் நம்பி ஒரு பெண்ணைத் தெரிந்து கொள்ளுகின்றான். அதைப் போலவே பெண்ணும் ஒரு ஆணைத் தெரிந்து கொண்டு வாழ்க்கைக்கு தங்களை ஒப்புக் கொடுக்கின்றனர். ஆனால் அவர்கள் அந்தச் சொந்தத்தில் வாழ்வார்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம்?

ஆனால் நாம் தெரிந்து கொண்டவர்கள் நம்மை ஏமாற்றி வஞ்சித்தாலும் நம்மைத் தெரிந்து கொண்ட ஒருவர் நமக்கு இருக்கின்றார். நம்மைச் சிருஸ்டித்த தேவனும், கர்த்தருமாய் இருக்கிறவர் நம்முடைய ஆண்டவராகிய இயேசுவே.அவர் நாம் நல்லவர்கள் என்பதினால் நம்மைத் தெரிந்து கொள்ளவில்லை. மாறாக அவர் நம்மேல் வைத்த அன்பினாலே நம்மைத் தெரிந்து கொண்டார். பரிசுத்த வேதாகமத்தில் ஏசாயா என்னும் தீர்க்கதரிசி மூலமாய் தேவன் அவர் பேசும் போது **இதோ, உன்னைப் புடமிட்டேன், ஆனாலும் வெள்ளியைப் போலல்ல, உபத்திரவத்தின் குகையிலே உன்னைத் தெரிந்து கொண்டேன்** (ஏசாயா 48:10) என்று நம்மை அவர் தெரிந்து கொண்ட காரணத்தைக் கூறுகின்றார் . **நீங்கள் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை, நான் உங்களைத் தெரிந்து கொண்டேன்** என்று (யோவான் 15:16) தன்னுடைய சீடர்களைப் பார்த்துச் சொன்னவர் அதே வார்த்தைகளையும் நமக்குள் அனுப்பி நம்மை அவரே தெரிந்து கொண்டார் என்பதையும் உறுதிப்படுத் துகின்றார்.

அவர் ஏன் என்னைத் தெரிந்து கொண்டார் என்று சிந்திக்கின்றீர்களா?. இதோ கர்த்தர் தம்முடைய வசனத்தில் நமக்கு காரணத்தை வெளிப்படுத்துகின்றார்.

**1. ஞானிகளை வெட்கப்படுத்தும்படி உங்களைத் தெரிந்து கொண்டார்.**

1 கொரி 1:27ம் வசனத்தில் பரிசுத்த பவுல் மூலம் பரிசுத்த ஆவியானவர் திருவுளம் பற்றும்போது **"ஞானிகளை வெட்கப்படுத்தும்படி தேவன் உலகத்தில் பைத்தியமானவைகளைத் தெரிந்து கொண்டர், பலமுள்ளவைகளை வெட்கப்படுத்தும்படி தேவன் உலகத்தில் பலவீனமானவைகளைத் தெரிந்து கொணடார்** என்று அறிவிக்கின்றார். எத்தனை ஞானிகள், எத்தனை மேதாவிகள் இந்த உலகத்தில் தோன்றியிருக்கின்றார்கள். உலகம் முழுவதும் உலகஞானத்தினால் நிறைந்திருக்கின்றது. கிறிஸ்துவின் சிலுவை மரணம் தர்க்கங்களின் கருப் பொருளாய் மாறியிருக்கின்றது. இருந்தார் என்றும், இல்லை யென்றும் பட்டிமன்றங்களும், நியாய மன்றங்களும் கூக்குரல் இடுகின்றன. ஆனால் உலக ஞானமற்ற நம்மை தம்முடைய திவ்வி ஞானத்தினால் நிரப்பி, இந்த உலகத்திற்கு தேவஞானத்தை பேசுகிறவர்களாயும், காண்பிக்கிறவர்க ளாவும் நம்மைத் தெரிந்திருக்கின்றார். அப்போஸ்தலர் 4ம் அதிகாரம் 13ம் வசனத்தை வாசித்துப் பாருங்கள், வேதம் சொல்லுகின்றது, **"பேதுருவும் யோவானும் பேசுகிற தைரியத்தைக் கண்டு, அவர்கள் படிப்பறியாதவர்கள் என்றும், பேதமையுள்ளவர்களென்றும் அறிந்தபடி யினால் ஆச்சரியப்பட்டு, அவர்கள் இயேசுவுடனே கூட இருந்தவர்கள் என்று அறிந்து கொண்டார்கள்**. ஆம், அன்பு உறவுகளே, நாம் அவரோடு நடப்பவர்களை ஆச்சரியத்தினால் மாத்திரமல்ல, அற்புத ஞானத்தினாலும், அற்புதத்தினாலும் நிரப்பி, எவர் உங்களை இழிவாய் எண்ணினாரே அவர்கள் ஆச்சரியப்படத்தக்கதாய் அவர்கள் முன்பாய் உங்களை உயர்த்துவார். கிறிஸ்துவோடு நடக்கும் எவனும் அவரைப் போல் மாறிவிடுகின்றான் என்பதில் ஆச்சரியமில்லை. காரணம் அவர் அதற்காகவே நம்மைத் தெரிந்து கொண்டார்.

**2.அன்பில் பரிசுத்தமுள்ளவர்களாயும், குற்றமில் லாதவர்களாயும் இருக்கத் தெரிந்து கொண்டார்.**

"தமக்கு முன்பாக நாம் அன்பில் **பரிசுத்தமுள்ளவர்களும், குற்றமில்லாத வர்களுமாயிருப்பதற்கு உலகத்தோற்றத்திற்கு முன்னே கிறிஸ்துவுக்குள் நம்மைத் தெரிந்து"** கொண்டபடியே என்று எபேசியர் 1:4 நமக்கு சொல்லுகின்றது. **உலகம் முழுவதும் பொல்லாங்கனுக்குள் கிடக்கின்றது** என்று பரி.யோவான் சொல்லுவது போல், இந்த உலகத்தில் மாயையும், போலியும் மலிந்து கிடக்கின்றது. எது எடுத்தாலும் போலி. போலியானது உண்மையானதை விட உயர்ந்து போல் தோற்ற மளிக்கின்றது. போலிச்சாமியார், போலி சந்நியாசி, போலிப் பாதிரியார்,போலிப் போதகர்கள் என்று போலியினால் நிரம்பியிருக்கும் இந்த உலகத்தினிடையே பரிசுத்த முள்ளவர்களாயும், குற்றமில்லாதவர்களாயும் காணப்பட மாத்திமல்ல, கிறிஸ்துவின் அன்பில் நாம் அவ்வாறு காணப்படவே தேவன் நம்மைத் தெரிந்திருக்கின்றார். கிறிஸ்துவின் அன்பு மாசில்லாத அன்பாகும். அவருடைய அன்பு சிலுவையைச் சகித்த அன்பாகும். அந்த அன்புக்கு நிகர் இல்லை. ஆனாலும் போலியான அன்பினைக் காட்டிப், புண்ணியரின் அன்பில் இருந்து நம்மை விழுத்தும் முயற்சியில் நம்முடைய எதிராளி வெற்றி கண்டு கொண்டிருக்கின்றான். ஆனால் கிறிஸவின் அன்பினால் இழுக்கப்பட்டு, நிரப்பப்பட்ட நாம் தாம் அவருடைய அன்பின சாட்சிகளாய் இருக்கின்றோம். சகோதார சிநேகத்திலும், சகோதர அன்பிலும், சகோதர பாசத்திலும் கிறிஸ்துவின் அன்பைத் காண்பிக்காத எந்த மனிதனும் கிறிஸ்து வினுடையவனாய் இருக்க முடியாது. " **ஆதலால் போஜனம் என் சகோதரனுக்கு இடறலுண்டாக்கினால் நான் என் சகோதரனுக்கு இடறலுண்டாகதபடிக்கு என்றென்றைக்கும் மாமிசம் புசியாதிருப்பேன்** (1கொரி 8:13) என்று பவுல் தன் வாழ்வைத் தூய்மையாய் காண்பித்தது போல வாழவே தேவன் நம்மைத் தெரிந்து கொண்டிருக்கின்றார்.

3. **நாம் பரிசுத்தரும், பிரியருமாய் இருப்பதற்காக நம்மைத் தெரிந்து கொண்டிருக்கின்றர்.**

தூய வாழ்வு என்பது தான் ஒரு உண்மையான கிறிஸ்தவனின் மனவிருப்பம், வாஞ்சை, ஏன் உயிர் மூச்சென்றே சொல்லலாம். " **ஆகையால் நீங்கள் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட பரிசுத்தரும், பிரியருமாய் உருக்கமான இரக்கத்தையும், தயவையும் , மனத்தாழ்மையும், சாந்தத்தையும், நீடிய பொறுமையும் தரித்துக் கொண்டு** என்று கொலேசிய சபைக்கு பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டு பவுல் எழுதிய நிருபம் 3:12 சொல்லுகின்றது. **பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே** என்று எபிரேயர் 12:14ல வேதம் சொல்லுகின்றது. தூய வாழ்வு என்பது இலகு வானாதல்ல. நெருக்கபட்ட வாசல் வழியே செல்லும் வாழ்வு. எனது கணவர் போதகர் மனோ தர்மலிங்கம் அடிக்கடி சொல்லுவது போல, பரிசுத்தவாழ்வுக்கு ஒப்புக் கொடுக் கப்பட்டவர்கள் பலிபீடத்தின் கொம்பில் கட்டப்பட்ட ஆட்டைப் போன்றவர்கள் தான். தங்களைப் கிறிஸ்து என்னும் மணவாளனுக்கு ஒப்புக் கொடுத்து எந்த நேரத்திலும் அடிக்கப்படும் ஆட்டைப் போன்ற தியாகவாழ்வு தான் தூய்மையான வாழ்வுக்கு நேராய் நடத்திச் செல்லும். **தேவன் நம்மை அசுத்தத்திற்கல்ல, பரிசுத்தத்திற்கே அழைத்தி ருக்கின்றார்** (1தெசலே 4:7). நம்முடைய சிந்தையும், செயலும் இந்தப் பாவ உலகில் பரிசுத்தத்தை பறை சாற்ற வேண்டும். உலகக் களியாட்டங்கள் நம்முடைய சபைகளுக்குள்ளும், ஆராதனைக்குள்ளும் நுழைந்து விட்டது. சினிமா பாணியில் நடனங்களும், ஆடல்களும், பாடல்களும் , ஏன் செய்திகளும் இன்று பரிசுத்த மணவாட்டியாகிய சபைக்குள் நுழைந்து ஜனங்களை இடுக்கமான பாதைக்கு பதிலாக அகலமும், விசாலமுமான பாதையைச் சுட்டிக் காட்டுகி ன்றது. இந்தப் பாதை மரணத்தின பாதையென்பதை உணராதபடிக்கு சத்துரு விசுவாசிகளின் கண்களை மறைத் திருக்கின்றான். இது அநீதியின்காலம், அந்திக் கிறிஸ்துவின் ஆட்சி ஆரம்பிக்க முன்னோட்டம் விடும் காலம். இந்தக் காலத்தில் தான் நீங்களும் நானும் கிறிஸ்துவின் சாட்சியாக பரிசுத்த வாழ்வை இந்த உலகத்தில் வாழ்ந்து காட்டவே தெரிந்து கொள்ளப்பட்டிருக்கின்றோம்.

Small minds can't comprehend Big Spirits. To be great you have to be willing to be mocked, hated and misunderstood.

STAY STRONG IN CHRIST

ஆகையால் அன்பாவர்களே, உங்களை அழைத்தவர் உண்மையுள்ளவர் என்பதில் உறுதியாய் இருங்கள். நான் உன்னைத் தெரிந்து கொண்டேன் என்று ஆண்டவர் பேசும் சத்தம் உங்கள் செவிகளில் கேட்கின்றதா?. தெரிந்து கொண்டவர் உண்மையாயும், உறுதியாயும் இருக்கப் பெலன் தருவார். **ஆகையால் சகோதரரே, உங்கள் அழைப்பையும், தெரிந்து கொள்ளுதலையும் உறுதியாக்கும்படி ஜாக்கிரதையாய் இருங்கள், இவைகளைச் செய்தால் நீங்கள் ஒருக்காலும் இடறிவிழுவதில்லை (2 பேதுரு 1:10)**

**சகோதரி திருமதி ஜெயானி. இ**

I will never leave you
Nor forsake you

Jesus is the answer ...

# கமல் சலீம் எனும் தீவிரவாதியின் மன மாற்றம்...

## மனிதனால் கூடாதது தேவனால் கூடும்.



1957 ஆம் ஆண்டு லெபனானில் பிறந்த இவர் ஒரு சுன்னி முஸ்லிம் ஆவார். அதோடு சலீம் ஒரு தீவிர யூத விரோ தியாவர்.

இன்றோ, கமல் சலீம் அரசியல்வாதிகளுக்கும், ராணுவ தலைவர்களுக்கும், உள்துறை நிபுணர்கள், பாதுகாப்பு அதிகாரிகள், சட்ட வல்லுனர்கள், தொண்டு நிறுவனங்கள், ஆலயங்கள், வழிபாட்டு தலங்கள், பல்கலைக்கழகங்கள் மற்றும் வரவேற்கும் பண்புடைய முகமதிய மக்களுக்கும் போதித்து வருகிறார்.

4 வயது குழந்தையாய் இருக்கும் போதே இவருடைய தாயார் அமெரிக்கர்களையும், யூதர்களையும் கொன்று குவித்து முகமதிய சமயத்திற்காக உயிர் துறக்கும் தியாகியாக மாற வேண்டும் என்று போதிக்கபட்டார். 7 வயதில் முதற் முயற்சியாக ஆயுதங்களை கடத்தும் குழந்தையாக அப்போதைய பாலஸ்தீன தீவிரவாத தலைவர் யாசர் அராபாத்துக்காக செயல்பட்டார். 15 வயதில் வெடிமருந்துகளில் மன்னனான இவர், லிபிய முன்னாள் அதிகாரியான முகமது கடாபியின் ஆட்சிகாலத்தில் அங்குள்ள பாலைவன தீவிரவாத முகாம்களில் உள்ள தீவிரவாதிகளுக்கு பயிற்சி கொடுத்து வந்தார்.

வாலிபனான பொது இவரின் தீவிரவாத மூர்க்கம் அதிகரித்தது. பாரிஸ், லண்டன், ஆப்கானிஸ்தான், செல்வசெளிபுள்ள அரபு ஷேக்குகளிடம் சென்று தீவிரவாத இயக்கங்களுக்கு தேவையான நிதிகளை திரட்டி வந்தார். உலகம் முழுவதும் தீவிரவாத தாக்குதல்கள் நடத்துவதே இதன் அடிப்படை. அதன் பிறகு அமெரிக்கா சென்று அங்குள்ள நலிந்த மக்களை தன்னுடைய திறமையால் முகமதிய மதத்திற்கு மாற்றினார்.

இதன் மத்தியில் ஓர் நாள் கொடுமையா விபத்தொன்றில் சிக்கினார். இவர் இவரின் இயக்கங்களுக்கு பணம் திரட்டிய போதும் தன்னை பற்றியோ, குடும்பத்தை பற்றியோ கவலை பட்டதில்லை. மருத்துவ காபிடோ, குடும்பத்தில் போதிய பணமோ இல்லாததினால் படுத்த படுக்கை ஆனார். இவரை கவனிக்க ஆளில்லாமல் மிகவும் வருத்தப்பட்டார். இவருடன் பிறந்தவர்கள் 13 பேர்.

கிறிஸ்தவர்களின் அன்பு இவரின் மனதை மாற்றியது. இவருக்கு மருத்துவம் பார்த்த மருத்துவர் தேவனை அதிகமாக நேசிப்பவர். இவரை காப்பாற்றின கிறிஸ்தவர் கமல் சலீமை தன்னுடைய வீட்டில் தங்க சொன்னார். கமல் சலீம் குணம் அடைய கிறிஸ்தவ கூடுகைகளில் ஜெபம் செய்யப்பட்டது. இவருக்காக காணிக்கையும் எடுத்தார்கள். இதை பார்த்த கமல் சலீமின் மனம் உடைந்தது. அல்லாவிடம் ஜெபம் செய்தார். தீவிரவாத முகாம்களில் அன்பை பற்றி போதிதிராத காரணத்தினால் இவர் இகிறிஸ்தவரின் அன்பை புரிந்து கொள்ளவில்லை. ஏன்? அல்லா தன்னை கைவிட்டு விட்டாரோ? ஏன் என்னை இனிலமைக்கு ஆளாக்கினார் என்று இவர் கேள்விக்கு அல்லாஹ்விடம் இருந்து பதில் வரவில்லை. "அல்லாஹ், என்னை ஏன் எதிரிகள் கைகளில் ஒப்படைத்தாய்? இவர் அல்லாஹ்வின் அற்புதத்தை பார்க்க விரும்பினார். "அல்லாஹ்.. நீர் இருப்பது உண்மையானால், நான் உன் குரலை கேட்க வேண்டும்" என்று கதறினார். ஒன்றும் நடக்கவில்லை.

அநேரத்தில் இவரின் மனதில் "ஏன் நாம் ஆபிரகாமின் தேவன், இசாக்கின் தேவன், யாகோபின் தேவனை கூப்பிடகூடாது?" என்ற கேள்வி எழுந்தது. அதி முதல் 'யேகோவா தேவனை' நோக்கி கூப்பிட ஆரம்பித்தார். அப்போது ஆணிகள் கடாவபட்ட இரு கரங்கள் இவருக்கு முன்பாக பயங்கர பரிசுத்த தேவன் காண்பித்தார்.

இயேசு கிறிஸ்து கமல் சலீமிடம் பேச ஆரம்பித்தார். அவரின் இனிய குரலை முதன் முதலாக கமல் சலீம் கேட்டார். பரிசுத்த தேவன் தான் கமல் சலீமை எவ்வளவாக நேசிக்கிறார் என்பதை அன்போடு, கனிவோடு பகிர்ந்து கொண்டார். அதன் பிறகு கமல் சலீமின் காயங்கள் முழுவதும் ஆறிப்போனது. அதிசயத்தின் தேவன் மீண்டும் ஓர் சவுலை பவுலாக மாற்றினார். அல்லேலூயா.... ஆமென்..

> **"ஏன் நாம் ஆபிரகாமின் தேவன், இசாக்கின் தேவன், யாகோபின் தேவனை கூப்பிடகூடாது?"**

வேதாகமத்தை வாசிக்க வாசிக்க தேவன் தன்னிடம் பேசுவதை உணர்ந்தார். இன்று கமல் சலீம் அரசியல் வாதிகளுக்கும், ராணுவ தலைவர்களுக்கும், உள்துறை நிபுணர்கள், பாதுகாப்பு அதிகாரிகள், சட்ட வல்லுனர்கள், தொண்டு நிறுவனங்கள், ஆலயங்கள், வழிபாட்டு தலங்கள், பல்கலைக்கழகங்கள் மற்றும் வரவேற்கும் பண்புடைய முகமதிய மக்களுக்கும் போதித்து வருகிறார்.

அன்பார்ந்த கிறிஸ்தவ விசுவாசிகளே, இவரை போன்ற ஆயிரம் ஆயிரம் சாட்சிகள் நம்மை சுற்றிலும் உள்ளன. ஜெபியுங்கள். அன்பு கூருங்கள். தேவன் உங்கள் அருகில் உள்ள அனைவரிடமும் பேச முடியும். நம்மை முழுவது மாக தாழ்த்துவோம்.

**எபிரெயர்.12: 1. ஆகையால், மேகம்போன்ற இத்தனை திரளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க, பாரமான யாவற்றையும், நம்மைச் சுற்றி நெருங்கி நிற்கிற பாவத்தையும் தள்ளிவிட்டு, விசுவாசத்தைத் துவக்கு கிறவரும் முடிக்கிறவருமாயிருக்கிற இயேசுவை நோக்கி, நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறுமையோடே ஓடக்கடவோம்**

மேலும் இவரை பற்றி.. http://kamalsaleem.com/

இவர் எழுதிய புத்தகம்-

The Blood of Lambs: A Former Terrorist's Memoir of Death and Redemption

**Thanks: Sri Lanka Christian Net work**

# பாடல் பிறந்த கதை……. Bro.A.Stanley Chellappa

Praise the Lord

சருவ லோகாதிபா, நமஸ்காரம்!

சருவ சிருஷ்டிகனே, நமஸ்காரம்!

தரை, கடல், உயிர், வான் சகலமும் படைத்த

தயாபர பிதாவே, நமஸ்காரம்.



இந்த அருமையான துதிப் பாடலை எழுதிய அருள் திரு. வேதமாணிக்கம், 1864-ம் ஆண்டு கல்லுக் கூட்டத்தில், மதுரநாயகம் - தேவாயி தம்பதியினருக்கு இரண்டாவது மகனாகப் பிறந்தார். ஐந்து வயதிலேயே தந்தையை இழந்த வேதமாணிக்கத்தை அவரது தாயார் தெய்வ பக்தியில் வளர்த்தார். தனது 20-வது வயதில், வேதமாணிக்கம் மத்திகோடு சபையைச் சார்ந்த இராகேலை மணம்புரிந்தார்.

வேதமாணிக்கம் தனது உயர் படிப்பை முடித்து அரசு அதிகாரியாக வேலையிலமர்ந்தார். பக்தி, விசுவாசம், மற்றும் சிறப்பாக, ஜெபம் ஆகியவற்றில் அதிக வாஞ்சையுள்ளவராக விளங்கினார். உலகப் பொருளுக்கோ, பணத்திற்கோ மனதில் இடம் கொடாது, மண்தரை போட்ட, ஓலை வேய்ந்த குடிசை வீட்டில் வாழ்ந்து வந்தார். ஒரு நாள் ஆங்கிலேயரான அவரது மேலதிகாரி, அவரை நோக்கி, "வேத மாணிக்கம், நீ வேதம் ஓத வேண்டியவன்; இங்கு எப்படி வேலை செய்யலாம்?" என்று கேட்டார். இக்கேள்வி வேதமாணிக்கத்தின் உள்ளத்தில் பதிந்தது.

ஆழ்ந்து சிந்தித்த வேதமாணிக்கம், நற்செய்திப் பணியில் கொண்ட ஆர்வத்தால், உடனே அரசு வேலையை இராஜிநாமா செய்து விட்டு, மிஷனில் ஆசிரியராகவும், பின்னர் மிஷன் பள்ளிகளின் ஆய்வாளராகவும் பணியாற்றினார். சிறிது காலம் மத்திகோடு சபை உபதேசியராக ஊழியம் செய்தபின், 1912-ம் ஆண்டு கல்லுக்கூட்டம் திருச்சபைப் போதகரானார். பல பாடல்களை இயற்றி, இன்னிசையுடன் நற்செய்தி அளித்து வந்தார்.

தன்னை ஒறுத்து ஊழியம் செய்த போதகர் வேதமாணிக்கத்தின் ஆலய ஆராதனையில், மக்கள் திரள் கூட்டமாகப் பங்கேற்றனர். அவர் வாலிபர்களை நல்வழிப் படுத்த "சுவிசேஷப் படையெழுச்சி," என்ற திறந்த வெளிக் கூட்டங்களை நடத்தினார். இந்நிகழ்ச்சிகளில் பாட, "சுவிசேஷப் படையெழுச்சிக் கீதங்கள்," என்ற 16 பாடல்கள் அடங்கிய பாடல் புத்தகத்தை வெளியிட்டார். ஞாயிறு தோறும் மாலை நேரத்தில், பெண்களுக்குச் சிறப்பு வேதப் பயிற்சிக் கூட்டங்களை, வீடுகளில் நடத்தினார். கண்ணியமும், நேர்மையும் நிறைந்த போதகர் வேதமாணிக்கம், ஊர்ப் பிரச்சனைகளைத் தீர்க்கும் ஊர்க்கூட்ட நடுவராகவும் சமுதாயப் பணி செய்தார்.




ஆண்டவரின் ஊழியப் பாதையில் தன்னுடையது அனைத்தையும் அர்ப்பணம் செய்த வேதமாணிக்கத்தின் குடும்பத்தை ஆண்டவர் ஆசீர்வதித்தார். அவரது மூன்று பையன்களுக்கும், மூன்று பெண்பிள்ளைகளுக்கும், தேவன் நல்ல படிப்பு, வேலை, மற்றும் இசை ஞானத்தைத் தந்தார். வயலின் தான் அவர்களின் குடும்ப வாத்தியம். அதில் அவர்கள் அனைவரும் மேதைகளாக விளங்கினார்கள். எனவே, குடும்பமாகப் பல இடங்களுக்குச் சென்று, நற்செய்திக் கூட்டங்களையும், கதாகாலட்சேபங்களையும் நடத்தி வந்தனர். வெள்ளி, மற்றும் ஞாயிறு இரவு ஜெபக் கூட்டங்கள் வாத்தியக்கருவிகளுடன் பாட்டுகள் முழங்க நடைபெற்றன.

1917-ம் ஆண்டு மே மாதம் 8-ம் தேதி, அருள்திரு. வேதமாணிக்கம் மார்த்தாண்டத்திலுள்ள தனது மனைவியின் தங்கை வீட்டிற்குச் செல்ல பஸ்ஸில் ஏறும்போது தவறி விழுந்ததில், பேருந்தின் சக்கரம் அவரது காலில் ஏறிக் காயம் ஏற்பட்டது. அத்துடன் பயணத்தைத் தொடர்ந்த அவர், மார்த்தாண்டத்தில், மூன்றாம் நாளில், 10-5-1917 அன்று, தனது 53-வது வயதில் மரணமடைந்தார். அவர் இயற்றிய, "ஆ! இன்ப காலமல்லோ," "ஜீவ வசனம் கூறுவோம்," என்ற பாடல்களும், திருச்சபைக் கீர்த்தனைப் புத்தகத்தில் இடம் பெற்றுள்ளன.

Note:

**Bro.A.Stanley Chellappa, founder of Christian Comforting Ministries to support sick and poor has been involved in many ministries including Missionaries Upholding Trust (MUT) and Children ministries. He along with his family founded Quiet Time Ministries to produce affordable CDs and VCDs. He could be reached at stanleychellappa@hotmail.com**

